

*பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த*
*பாமன்னுமாற னடிபணிந் துய்ந்தவன் பல்கலையோர்*
*தாம்மன்ன வந்த விராமாநுசன் சரணாரவிந்தம்*
*நாம்மன்னிவாழ நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே.*

ஓ மனமே! தாமரைப்பூவில் பொருத்தமுடையளாயிருந்த பிராட்டி அப்பூவைவிட்டு வந்து பொருந்துகைக் குறுப்பான போக்யதையையுடைய திருமார்பை உடையனான பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ் பாசுரங்களிலே ஊற்றமுடையரான நம்மாழ்வாருடைய திருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவரும், பலபல சாஸ்திரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும்படி இவ்வுலகில் வந்தவரித்த வருமான எம்பெருமானுருடைய திருவடித் தாமரைகளை நாம் ஆச்ரயித்து வாழ்வதற்குறுப்பாக அவ்வெம்பெருமானாரது திருநாமங்களையே ஸங்கீர்த்தினம் பண்ணுவோமாக!

இராமனுசநூற்றந்தாதி - 1



*பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த*
*பாமன்னுமாற னடிபணிந் துய்ந்தவன் பல்கலையோர்*
*தாம்மன்ன வந்த விராமாநுசன் சரணாரவிந்தம்*
*நாம்மன்னிவாழ நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே.*

ஓ மனமே! தாமரைப்பூவில் பொருத்தமுடையளாயிருந்த பிராட்டி அப்பூவைவிட்டு வந்து பொருந்துகைக் குறுப்பான போக்யதையையுடைய திருமார்பை உடையனான பெருமானுடைய திருக்கல்யாண குணங்கள் நிறைந்த தமிழ் பாசுரங்களிலே ஊற்றமுடையரான நம்மாழ்வாருடைய திருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவரும், பலபல சாஸ்திரங்களை ஓதின மஹான்கள் நிலைபெறும்படி இவ்வுலகில் வந்தவரித்த வருமான எம்பெருமானுருடைய திருவடித் தாமரைகளை நாம் ஆச்ரயித்து வாழ் வதற்குறுப்பாக அவ்வெம்பெருமானாரது திருநாமங்களையே ஸங்கீர்த் தினம் பண்ணுவோமாக!

இராமனுசநூற்றந்தாதி - 1

# ஸப்தகிரி

ஏப்ரல் - 1991

தனிப்பிரதி ரூ. 1 | மலர் 21

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 11

## உள்ளுறை

பக்கம்



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ ராமானுஜர்—சித்திரம்: கே. ஜெகதீஷ்

பின்னட்டையில் . திருப்பதியில் கங்கையம்மன்

2-வது பக்கம : 'தாஸஸாஹித்ய'த்துறை ஆதரவில் படிவிழா

3-வது பக்கம் : ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயில்-திருப்பதி.

சிறப்பாசிரியர்

திரு. எம். வி. எஸ். பிரஸாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

நாகரிகம் என்றால் என்னவென்று தெரியாத காட்டுவாசிகள் முதல், நாகரிகத்தின் உச்சாணிக் கொம்பில் நின்றுலாவும் மாந்தர்களும், நாளும் புதுமைகளைத் தந்திடும் விஞ்ஞானிகளும் நிறைந்து வாழும் மேலை நாட்டு வாசிகள் வரை, அவர்களுக்கென்று கடவுள் நம்பிக்கைகளும், சமயக் கோட்பாடுகளும் இந்நானிலத்தில் இருந்துதான் வருகின்றன. ஆனாலும் இந்து சமயத்தின் பெருமைக்கும், சிறப்புக்கும், ஆற்றலுக்கும் நிகராக உலகத்துப் பிற சமயங்கள் ஒப்பாக மாட்டா. சட்டங்கள், தண்டனைகள், கட்டுப்பாடுகள், சலுகைகள் போன்றவற்றைப் பின்னணியாகக்கொண்டு மலர்ந்ததல்ல இந்துசமயம். வாழ்க்கை இலக்கியத்திற்கு இலக்கணமாகத் திகழ்ந்து, வேற்றுமையில் ஒற்றுமை கண்டு உயர்ந்தமதம் இம்மதம். மரம், நீர், மலை, பறவை, தெய்வ உருவத் திருமேனிகள் ஆகியவற்றைத் தொழுதிடும்போது அவை பலவகைகள், பல நிறங்கள், பல உருவமைதிகள் கொண்டு திகழ்ந்தாலும், அவர்கள்தம் தொழுகைக்குப்பின் இந்த சமய உணர்வு எனும் ஒற்றுமை உணர்வே இம்மண்ணின் மக்களை ஒன்றுபடுத்தி வருகின்றது.

இத்தகு சீர்மைமிகு இந்து மதம் பல சமயப் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டாலும் அவற்றுள் சைவமும், வைணவமும் சங்கரர் ஸ்தாபித்த ஷண்மதங்களுள் மிகச் சிறந்தவையாக, பிற கிளைச் சமயக் கூறுகளைத் தங்களிடம் அமைந்தனவாக விளங்குகின்றன. சமயங்களின் சிறப்புக்கும் பெருமைக்கும் அவை கொண்டு விளங்கும் தத்துவ விளக்கங்கள்; அறவுரைகளே பெரிதும் காரணங்களாகின்றன. சமயச் சான்றோர்களின் மேம்பட்ட இறையுணர்வின் ஆழத்தின் காரணமாகவும், சமுதாய உணர்வின் உயர் எண்ணங்களின் காரணமாகவும் அவர்கள்தம் தத்துவ விளக்கங்களும், இலக்கியங்களும் அமைந்துள்ளன.

அறிவால் உணர்ந்து, உணர்வால் உயர்ந்த தத்துவப் போராட்டத்தின் பின்னணியில் விளைந்த ஜீவாத்மா-பரமாத்மா உறவு விளக்கங்களின்மீதான கருத்து வேறுபாடுகள் இம்மண்ணிற்குப் புதியன அல்ல. பரமாத்மாவுக்கும், அவர் கருணையினால் பிறந்திட்ட மனிதர்களாகிய ஜீவாத்மாக்களுக்கும் இடையே உள்ள உறவு நிலையினை கண்டு தெளிய ஆரம்பிக்க, அம்முயற்சியில் தங்களுக்குள் பிணங்க, விளைவாக உயர்ந்த தத்துவச் சிந்தனைகள் மலர ஆரம்பித்தன. ஆத்மாவும், பரமாத்மாவும் வேறல்ல, ஒன்றுதான் எனும் அபேத சித்தாந்தத்தை ஒருவர் புகன்றிட, இரண்டும் வேறு, ஆனால் ஆத்மா சிறிது சிறிதாக பக்குவம் அடைய அது உயர்ந்து அந்த பரமாத்மாவுடன் கலத்தலே முக்திக்கு வழி என்று மற்றொருவர் அறுதியிட, அவை ஒன்றல்ல. வேறு வேறு, இரண்டும் கலப்பது நடவாதது என்று வேறொருவர் விளக்கம் தந்திட, இம்மூன்று விளக்கங்களும் அப்பரமனின் பெருமை அறியவும், இறுதியில் அவனை அடைதலுமேயாம் என்பதை அறிந்து இன்புறுகின்றோம். போகும் வழிகள்தாம் வேறு சேரும், இடம் ஒன்றுதான்.

'தத்வ மஸி' என்று கூறிய சங்கரர் தன் அத்வைத சித்தாந்தத்தில் நிர்க்குண உபாஸனையின் பெருமை கூறி, ஞான மார்க்கத்தின் அவசியத்தைப் பேசிட்டபோது, அப்பரம்பொருளின் பேரருளுக்கு சாமானியரும் ஆளாகிடும் வகையில் சகுண வழிபாட்டின் மூலம் பக்தி மார்க்கத்தின் பெருமையை அறிவுறுத்தி, ஜீவாத்மாவின் மேன்மையினையும் பரமாத்மாவின் எளிவந்த நிலையினையும் சமய உலகம் அறிந்திட வழிவகுத்தவர் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை உருவாக்கிய ஸ்ரீ இராமானுஜர். தீவிர ஆசார்ய பக்தி ஈடுபாடும், சரணாகதி தத்துவ விளக்கமும், விக்ரக ஆராதனை ஈடுபாடும் அவர்தம் சமயக் கொள்கைக்குப் பெரும் உரமாக அமைந்தன. பதவிக்காகவும், புகழுக்காகவும், பொருளுக்காகவும் 'பகுத்தறிவு கொள்கை' எனும் முகமூடி அணிந்து மக்களிடையே பகற்கொள்ளை அடிக்கும் இன்றைய சில பல அரசியல்வாதிகள், பொறாமை கொள்ளும் வகையில் ஏன் நாணிடும் வகையில் சுமார் 900 ஆண்டுகளுக்கு முன்பேயே சிறந்த சமூக சீர்திருத்தவாதியாகவும், செயல் வீரராகவும் ஸ்ரீஇராமானுஜர் விளங்கினார். தன் குலத்தவரல்லாத ஒருவரை தன் ஆசார்யனாக அக்காலத்திலேயே அவர் கொண்டது, இன பேதம் கடந்த அவரது உள்ளத்துணிவினை எடுத்துக் காட்டியது. அவரது 'புரட்சி'க் கருத்துக்கள் கடவுள் நம்பிக்கை எனும் அடித்தளத்தின்மீதுதான், மரபு வழி மாசுபடாமல், சமதர்ம சமூக, பொருளாதார மேம்பாட்டினை மனதிற்கொண்டே செயற்படுத்தப்பட்டன. வைணவ நெறி செழித்தோங்க பல்வேறு ஜாதியினரைச் சார்ந்த அறிஞர் பெருமக்களைக் கொண்ட 74 சிம்மாஸனாதிபதிகளாக அவர் நியமித்தது, அவரது சமுதாய புரட்சிக்கு ஒரு சிறந்த உதாரணமாகும். மனிதப் பிறவியின் அரும்பெரும் குணங்களான அன்பு, தொண்டு, தியாகம் ஆகியவற்றை வெளிப்படுத்தும் ஒரு வாய்ப்பினை இல்லற வாழ்க்கை மட்டுமே அளிக்கக் கூடியது என்று உலகுக்கு விளக்கிக் கூறியவர் ஸ்ரீஇராமானுஜர். தங்களது தனிப்பட்ட ஆன்ம விடுதலைக்காக சமுதாயத்தைக் கண்டு ஓடிடும் மகான்களுக்கிடையில், சமுதாய பிரச்சனைகளை ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டு, தனக்கு நரகம் கிடைப்பதாயினும் சரி என்று முடிவெடுத்து திருமந்திரார்த்த ரகசியத்தினை கோயில் கோபுரமேறி பொது மக்களுக்கு அறிவித்தது அவருடைய உள்ளத்தின் உயர்வுக்கும், மேல் கோட்டை கோயிலுக்குள், கட்டுப்பாடுகளைமீறி அரிஜன மக்களோடு தோளோடு தோள் சேர்ந்து ஆலயப் பிரவேசம் செய்தது அவரது கொள்கை வெறிக்கும் ஈடு இணை கூறிட இன்று வரை இம்மாநிலத்தில் எவரும் பிறந்திடவில்லை எட்டெழுத்துப் பொருளை அறிய திருக்கோட்டியூர் நம்பியிடம் பதினெட்டு முறை சென்று வந்தது அவரது ஆன்மீகப் பசியினையும், தான் நடத்திய சமய, சமூகக்கருத்தரங்குகளில் ஆண்டாள் உள்ளிட்டபல பெண்களுக்கு வாய்ப்பளித்தது அவரது 'பெண் விடுதலை' கொள்கையினையும், ஸ்ரீ வைஷ்ணவம் தழைத்தோங்க 74 சிம்மாஸனாதிபதிகள், 700 சந்நியாஸிகள், 1200 தீவிர தொண்டர்கள் கொண்ட இயக்கம் ஒன்றினை ஏற்படுத்தியதும், ஸ்ரீரங்கம்,

(48-ம் பக்கம் பார்க்க)

# செய்திச் சுருக்கம்

உத்திர பிரதேசம் ரிஷிகேஷத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 26-5-91 முதல் 3-6-91 வரை கொண்டாடப்பட உள்ளது. 30-5-91 அன்று கருட சேவையும், 2-6-91 அன்று திருத்தேரும், 3-6-91 அன்று சக்ரஸ்நானமும் நடைபெறும்.

ஃ ஃ ஃ

திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 20-5-91 முதல் 28-5-91 நடைபெற உள்ளது. 20-5-91 அன்று துவஜாரோஹணமும், 24-5-91 அன்று கருட சேவையும், 27-5-91 அன்று ரதோத்ஸவமும், 28-5-91 அன்று சக்ரஸ்நானமும் நடைபெறும். இப்பிரம்மோத்ஸவ நாட்களின் போது கோயில் வளாகத்தில் ஸ்ரீ அன்னமாசார்யா திட்டப் பிரிவு மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை மற்றும் நாட்டியக் கல்லூரியைச் சார்ந்த கலைஞர்களால் இன்னிசை மற்றும் நாட்டிய நிகழ்ச்சிகள் நடைபெறும்.

ஃ ஃ ஃ

திருப்பதியை அடுத்துள்ள நாராயணவனத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்ஸவம் 26-5-91 முதல் 3-6-91 வரை நடைபெற உள்ளது. 30-5-91 அன்று கருட சேவையும், 2-6-91 அன்று திருத்தேரும், 3-6-91 அன்று சக்ரஸ்நானமும் நடைபெறும். இப்பிரம்மோத்ஸவ நாட்களின்போது மாலை நேரங்களில் ஹரி கதை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநிலம் கடப்பை மாவட்டம் தாள்ளபாக்கம் கிராமத்திலுள்ள ஸ்ரீ சென்னகேசவ சுவாமி, ஸ்ரீ சுதர்ஸன சக்ர சுவாமி, ஸ்ரீ சித்தேஸ்வர சுவாமி ஆகியோரின் திருக்கோயில்களை 15-3-91 அன்று தி. தி. தேவஸ்தானம் தன் மேலாண்மைக்கீழ் ஏற்றுக் கொண்டது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில் கடப்பா மாவட்ட முதல்வர் திரு. ஏ. கே. ஃபரிதா உள்ளிட்ட பல உள்ளூர் பிரமுகர்களும், தேவஸ்தான உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

கர்னாடகம், தமிழ்நாடு, ஆந்திரம் ஆகிய மாநிலங்களைச் சார்ந்த சுமார் 60 பஜனைக் கோஷ்டிகளைச் சார்ந்த மூவாயிரத்திற்கும் மேற்பட்ட பக்தர்கள் மரபுவழி கன்னட ஹரிதாஸர்களைப் போன்று உடையணிந்து 9-3-91 அன்று திருமலைக்குக் கூட்டமாக கால்நடையாக பஜனைப் பாடல்களைப் பாடிக் கொண்டு சென்றனர். இவர்கள்தம் யாத்திரையினை கர்னாடக மாநிலம் பெஜாவர் மடத்தின் தலைவர் துவக்கி வைத்தார். தி. தி. தே. தாஸ சாகித்யத் துறையின் சார்பில் ஏற்பாடு செய்யப்பட்ட இவ்விழாவில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத், முன்னாள் செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் ஸ்ரீ தியாகராஜ கோயில் அறக்குழுவின் சார்பில் 49-வது வருடாந்திர ஸ்ரீ தியாகராஜ இசை விழா ஜூன் மாதத்தின் முதல் வாரத்தில் நடைபெற உள்ளது. இவ்விழாவின் துவக்க நாள் நிகழ்ச்சிகளின்போது தேர்ந்தெடுக்கப்பட்ட இசைக் கலைஞர்க்கு அறக்குழுவின் சார்பில் "ஸப்தகிரி ஸங்கீத வித்வன்மணி" எனும் கௌரவ விருது வழங்

(48-ம் பக்கம் பார்க்க)

## சந்தாதாரர்களுக்கு...

31-5-91—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

1 114 122 191 194 309 320 322 325 449 527 595 657 660 668 670 677 685 686 687 691 694 1207 1554 1561 1582 1600 2444 2974 2989 2993 2994 3006 3010 3012 3020 3027 3035 4224 4225 4232 4234 4241 4243 4245 4250 4263 4276 4280 4284 4293 4297 4302 4306 4309 4321 4332 4333 4348 4350 4353 5486 5494 5495 5497 5503 5506 5507 5514 5516 5521 5530 5532 5535 5537 5540 5542 5545 5558 5561 5563 5564 5567 5593 5600 5602 5608 5609 5612 5615 5621 5623 5629 5631 5634 5635 5637 5642 5645 5651 5652 5658 5668 5674 5677 5678 6947 7315 7317 முதல் 7322 7324 முதல் 7332 7334 முதல் 7349 7351 7352 முதல் 7376 7378 7380 7381 7383 முதல் 7389 7391 7392 7393 7395 முதல் 7408 7410 முதல் 7422 7425 முதல் 7447 7450 முதல் 7453 7455 7457.

# ஸ்ரீ ராமாநுஜ ஸித்தாந்தமும் திருவேங்கடமுடையானும்



விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயம் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பதால் அநாதி. அது சிற்சில காலங்களில் சிலரால் மறைந்திருந்து அவ்வப்போது அவதரித்த ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆழ்வார்களில் தலைவர் நம்மாழ்வார், ஆசாரியர்களில் தலைவர் எம்பெருமானார். இவ்விருவராலும் தத்தம் அவதார காலங்களில் இந்த ஸம்ப்ரதாயம் விசேஷமாக ப்ரகாசப்படுத்தப்பட்டிருக்கிறது.

திரு. தி. அ. கிருஷ்ணமாசார்யாள்,
திருப்பதி.

ஆழ்வார்கள் உகந்தருளின திவ்ய தேசங்கள் நூற்றெட்டனுள் கோயில் திருமலை பெருமாள் கோயில் என்னும் மூன்றும் சிறந்தவை என்று கருதப்பட்டன. ஆழ்வார்கள் எல்லாராலும் மங்களா சாஸனம் செய்யப்பட்டமையால் கோயில் என்னும் ஸ்ரீரங்கம் முதன்மை பெற்றது. தொண்டரடிப் பொடியாழ்வார் தவிர மற்ற ஒன்பது ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப் பெற்றமையால் இத்திருமலை இரண்டாவதாக எண்ணப்பட்டது. முன்பு ஒரு கால் ஸ்ரீரங்கத்து அரையர் இத்திருமலைக்கு எழுந்தருளியிருந்தபோது அவரை இங்குள்ளார் இயலைப் பாடும்படி ப்ரார்த்தித்தார்களாம். அவர் தமது வழக்கம் போல் 'பதின்மர் பாடும் பெருமாள்' என்று திருவேங்கடமுடையானுக்கு விருது கூறி இயலைப் பாடத் தொடங்க, இங்குள்ளார் அவ்விருது நம் பெருமாள் ஒருவர்க்கே தகும். சோழியன் (தொண்டரடிப் பொடியாழ்வார்) கெடுத்ததனால் திருவேங்கடமுடையானுக்கு அது பொருந்தாது என்றார்களாம். இந்த ஐதிஹ்யம், கோயில் முதலாவது, திருமலை இரண்டாவது என்ற விஷயத்தில் தெளிவைப் பிறப்பிக்குமன்றோ?

ஒருவாறு நோக்கினால் இத்திருமலையே முதலாவது என்று சொல்லலாம். திருப்பாணாழ்வார் லோக ஸாரங்க மஹாமுனி தோளில் வந்து ஸ்ரீரங்கநாதனைப் பாதாதி கேசாந்தமாக அநுபவித்து அமலனாதிபிரான் பாடினர். அதில் கடைசியில் 'அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்றிருப்பதால் அரங்கனைக் கண்ட கண்களால் மற்றொருவரைக் காணாத அவர் பதிவ்ரதை என்று சொல்லத் தகுந்தவர். தொண்டரடிப் பொடிகளும் அத்தகையரே. அப்படிப்பட்ட திருப்



பாணாழ்வாரும், 'விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்', என்று முதற்பாட்டிலும் 'மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் அரங்கத்தர வினணையான்', என்று மூன்றாம் பாட்டிலும் திருவேங்கடமுடையானைப் பாடினர். அவ்விடத்து வ்யாக்யானத்தை ஸேவித்தால், ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து எம்பெருமான் இறங்கிவரும் போது திருமலையில் திருவேங்கடமுடையானாய் நின்று, பிறகு கோயிலில் அரங்கனாய்ப் பள்ளி கொண்டருளினான் என்று விளங்குகிறது. இதனால் (முதலில் திருமலையில் நின்றருளின காரணத்தால்) திருமலை முதல் ஸ்தானத்தை வகிக்கிறது என்று சொல்லத் தடையில்லையன்றோ? மேலெடுத்த அமலனாதிபிரான் பாட்டுப் பகுதிகளிலிருந்து திருவரங்கச் செல்வனும் திருவேங்கடத்துறை செல்வனும் ஒரே வ்யக்தி என்று.தெளியப்படுகின்றமையால், தொண்டரடிப் பொடியாழ்வார் பக்தியின் மிகுதியால் அரங்கனைப் பாடியவர் திருவேங்கடமுடையானையும் பாடியவரே ஆவர். பேசிற்றே பேசும் ஏககண்டர்களன்றோ ஆழ்வார்கள். ஆக ஒரு கண் கொண்டு பார்த்தால் திருமலை முதன்மை பெறும் என்பது துணியப்படும்.

நம்மாழ்வாரும் எம்பெருமானாரும் இத்திருமலையில் மிகவும் ஈடுபட்டு ஸித்தாந்தத்தை வெளிப்படுத்தினார்கள். நம்மாழ்வார் பெரிய பெருமாள் விஷயமாக, 'கங்குலும் பகலும்' என்ற பதிகம் பாடினர். அதில் அவர்க்குத் தானான தன்மையில் அநுபவம் இல்லை. ப்ரேமம் அதிகமாகி ஒரு நாயகியின் தசையை அடைந்து, பேசலாம் என்று பார்த்தார். தம் துக்கத்தைத் தம்மாலும் பேச முடியாத அவ்வளவு துக்கநிலை ஏற்பட்டபடியால் தாய் பாசுரமாகப் பேசினார். இத் திருவாய்மொழிக்குப் பொருள் சொல்லும் போதெல்லாம் ஸ்ரீ பராசரபட்டர், 'ஆழ்வாருடைய ப்ராவண்யம் நமக்கு இல்லாமையால் அவரது நிலையை அறிய முடியாது. ஆகையால் இப்பதிகத்திற்கு நாம் எப்படிப் பொருள் சொல்லப் போகிறோம்.' என்றருளிச் செய்து தலையில் கையை வைத்துக் கொண்டிருப்பாராம். இந்த ஐதிஹ்யத்தால் ஆழ்வாருடைய ப்ராவண்யம் எல்லை கடந்து, தம்மையும் தாம் மறந்திருந்தமை விளங்குகின்றதல்லவா?

இனி, திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் தானான தன்மையில் சாஸ்த்ரார்த்தங்களை வெளிப்படுத்தி அனுபவித்த நிலையைப் பார்க்கலாம். த்வயம் என்ற மந்த்ரத்தின் முதற்பகுதியில் சொல்லப்படுவது சரணாகதி. அதாவது பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுதல். இரண்டாம் பகுதியின் பொருள் அச்சேர்த்தியில் கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தல். இந்தச் சரணாகதியையும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் முறையே அகலகில்லேன், ஒழிவில் காலம் என்னும் இரண்டு பாட்டுக்களாலும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையானிடத்திலே செய்தார். மாறனடி பணிந்துய்ந்தவரான எம்பெருமானாரும், ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் 'ब्रह्मणि श्रीनिवासे भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा' 'ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவதுமம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா' என்று பரப்ரஹ்ம சப்தத்தின் பொருளான அலர்மேல் மங்கையுறை மார்பனிடத்தில் தமக்கு பக்தி உண்டாக வேண்டுமென்று அருளிச் செய்தார். வேதார்த்த ஸங்க்ரஹம் என்று ப்ரஸித்தமான க்ரந்தமும் திருவேங்கடமுடையானெதிரில் எம்பெருமானார் செய்த உபந்யாஸமே ஆகும். ஆக ஆழ்வாரும் எம்பெருமானாரும் மிக உகந்த ஸ்தானமாதல் பற்றிக் கோயிலைக் காட்டிலும் ஆதரிக்கத் தகுந்த இடம் திருமலை என்பதாயிற்று. இதனால் கோயிலுக்குக் குறை ஒன்றும் ஏற்படாது. ந ஹி நிந்தா ந்யாயத்தை இங்கு நினைக்க.

ஆசார்யருசிபரிக்ருஹீதமான அர்த்தமே இவ்வாத்மாவுக்குத் தஞ்சம் என்பர் பெரியோர். இதை, கண்ண பிரான் தரும புத்திரனை பீஷ்மரிடத்தில் தர்மோபதேசம் பெறும்படி ஏவினதாகவும், தரும புத்திரன் பீஷ்

# சிறந்தவை

ஒன்றாகக் காண்பதே காட்சி—புலன்ஐந்தும்
வென்றான் தன்வீரமே வீரம—ஒன்றானும்
சாகாமல் கற்பதே வித்தை; தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.

—ஔவையார்.

பொருள்: மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து புலன்களின் வழியே உள்ளத்தைச் சென்று அலையவிடாது அடக்கி, அகத்தின் கண்ணே ஆண்டவனைக் கண்டு வழிபடுவதே உண்மையானக் காட்சியாகும். ஐந்து புலன்களின் அவாவினைக் கட்டுப்படுத்தி, அவற்றைத் தன் அடிமையாக்குவதே சிறந்த வீரமாகும். உலகில் உள்ள எப்பொருள்களாலும் அழிக்க முடியாத கல்வியைக் கற்பதே சிறந்த வித்தையாகும். பிறரிடம் அடிமையாக இருந்து அவரிட்ட ஏவலைச் செய்து உண்டு வாழாமல் தானாகவே தன் முயற்சியினால் மெய் வருந்தி உழைத்து உண்ணும் உணவே சிறப்புடையது ஆகும்.

தகவல்: கமலவேணி தனபதி.

மரை அணுகி, 'को धर्मस्सर्वधर्माणां भवतः परमो मतः' 'கோ தர்மஸ் ஸர்வதர் மாணாம் பவத: பரமோ மத:' 'உயர்ந்த தர்மமாகத் தேவரீர் கருதியிருக்கும் தர்மம் யாது?' என்று கேட்டதாகவும், அதற்கு பீஷ்மர்,

'एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः ।
यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरस्सदा' ॥

'ஏஷ மே ஸர்வதர்மாணாம் தர்மோऽதிகதமோ மத: | யத் பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச் சேந்நரஸ் ஸதா' ||

'ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தாலே ஸ்ரீமந் நாராயணனைப் பூஜிப்பது தான் உயர்ந்த தர்மமென்று நான் கருதியிருப்பது' என்று பதிலளித்ததாகவும் சொல்லப்படுகிற ஐதிஹ்யத்தைக் கொண்டு தெளியலாகும். வேத புருஷனும் நம்மாழ்வாரும் எம்பெருமானாரும் ஆகிய ஆசார்யர்கள் எந்த அர்த்தத்தை உகந்து அநுஷ்டித்திருக்கிறார்களோ அந்த அர்த்தம் தான் நம்மாலும் உகந்து அநுஷ்டிக்கத் தக்கது என்னத் தடையில்லையன்றோ. அதைச் சிறிது காண்போம்.

வேத புருஷன் 'द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः' 'த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:' முதலிய வாக்கியங்களினால் மோக்ஷோபாயமாக பக்தியை விதித்தான். 'முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே' என்ற வாக்யத்தினால் ப்ரபத்தியையே (சரணாகதியையே) அநுஷ்டித்தான். நம்மாழ்வார் தமது ப்ரபந்தங்களில் பக்தி செய்யவேணும் என்று பல இடங்களில் உபதேசித்துவிட்டு 'அகலகில்லேன்' என்ற பாட்டினால் சரணாகதியையே ஆசையுடன் அநுஷ்டித்தார். எம்பெருமானாரும் இதையடியொற்றி ஸ்ரீபாஷ்யத்தில் பல இடங்களிலும் பக்தியை விதித்துவிட்டு, கத்யரத்யத்தினால் ப்ரபத்தியையே தாம் உகந்து அநுஷ்டித்தார். இம்மூவரும் பக்தியை உபதேசித்தார்களே தவிர அநுஷ்டித்தது ப்ரபத்தியையே ஆகையால் பக்தி ப்ரபத்திகளுக்குள் ப்ரபத்திதான் (ஆசார்யர்கள் ஒரு மனதாக உகந்தது காரணமாக) சிறந்தது. அதுதான் நம்மாலும் உகந்து பின்பற்றத் தகுந்தது. அப்படிப்பட்ட ப்ரபத்திக்குப் பயன் கைங்கர்யமே ஆகும் என்பது விசிஷ்டாத்வைத மதக் கொள்கை.

இனி திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் ஈடுபட்டு உபாயோபேயநிஷ்கர்ஷம் செய்தருளினமையைச் சிறிது விவரிப்போம். இளைய பெருமாள், இராமபிரானிடம், अहं सर्वं करिष्यामि, எல்லா அடிமைகளையும் நான் செய்வேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தார். பிராட்டியை முன்னிட்டு இராமபிரானை, கைங்கர்யத்திற்காகத் தஞ்சம் புகுந்தார். நம்மாழ்வாரும் திருவேங்கடமுடையானிடம் கைங்கர்யம் செய்ய வேணும் என்று பாரித்தார். பிராட்டி புருஷாகாரமாகத் திருவேங்கடமுடையானைச் சரணம் புகுந்தார். ஆயினும் இளைய பெருமாளைக் காட்டிலும் நம்மாழ்வார் உயர்ந்தவர். எங்ஙனே என்னில்,

'எல்லாம் தெரியும்' என்பதைக் காட்டிலும், 'தெரியாதது ஒன்றுமில்லை' என்பதல்லவோ உயர்ந்தது! இளையபெருமாள் 'நீ ஏவியதெல்லாம் செய்யக் கடவேன்' என்றாரே தவிர, இராமபிரான், 'காட்டிற்கு வரவேண்டாம்' என்று தடுத்ததை இளைய பெருமாள் கேட்கவில்லை. ஆகையால் எல்லாம் செய்யக் கடவேன் என்றது, எல்லாம் தெரியும் என்றதுபோல் குறைந்ததே. இனி, தெரியாதது ஒன்றுமில்லை என்பதைப் போல் உயர்ந்தது ஆழ்வாருடைய பாரிப்பு. 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்'. தொண்டு செய்தலில் ஒன்றும் குறையாமல் செய்ய வேண்டும் என்கிற ஆழ்வார் வாக்கு பொய்யில் பாடலாதலால், தெரியாததொன்றுமில்லை என்பதுபோல், ஆழ்வார் செய்யாத தொண்டு இல்லை என்பது விளங்குவதால் ஆழ்வார் வாக்கு உயர்ந்தது அல்லவா?

இனி அகலகில்லேன் என்ற பாசுரத்தில் அநுஸந்தித்த அர்த்தத்தைச் சிறிது அனுபவிக்கலாம். அவ்வர்த்தமே சரணாகதி என்ற ப்ரபத்தி ஆகும். பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு குணபூர்த்தியுள்ள திருவேங்கடமுடையானை, ஆழ்வார் தம்முடைய புகலில்லாமையைச் சொல்லிக் கொண்டு சரணம் புகுகின்றார் என்பது இப்பாசுரத்தால் விளங்குகின்றது. 'அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா' என்ற முதலடியில் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றுகிறார். பிராட்டியால் பேறு பூர்த்தியாகிறது. மோக்ஷம் நமக்குக் கிடைக்கவேணுமானால் அதற்கு நான்கு காரணங்கள் இன்றியமையாதன என்பர். அவையாவன, சரீரம் ஆத்மா ஸர்வேச்வரன் பிராட்டி என்பன. வராகப் பெருமாள் பூமிப் பிராட்டிற்கு உபதேசிக்கும்போது, 'सुस्वस्थे शरीरे सति' என்று சரீரத்தைப் பேற்றுக்கு உபாயமாக அருளினார். நிவ்ருத்தனான (தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்வதிலிருந்து மீண்ட) ஆத்மா காரணம் என்பது திருமந்திரத்தில் நம: என்கிற பதத்தினால் தெரிய வருகிறது. 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்ற சரமச்லோகத்தினால், ஸர்வேச்வரனான தான் காரணம் என்பதைக் கண்ணபிரானே அருளிச் செய்தான். பிராட்டி புருஷகாரமானால் அல்லது ஸர்வேச்வரன் கார்யம் செய்யமாட்டானென்று த்வயமந்த்ரத்தில் தெரிய வருதலால், அவளால் தான் கார்யம் பூர்த்தியாகும் என்று விளங்குகிறது. அதனால்தான் ஆழ்வார் பிராட்டியைப் பற்றுகிறார் முதலடியினாலே.

பிராட்டி இருந்தால்தான் நம் காரியம் கைகூடுமென்பது, இராவணன் காகாசுரன் என்ற இருவரது கதைகளையும் நோக்குவார்க்கு விளங்கும். இராவணன் சாபபயத்தினால் ஸீதையிடம் சேஷ்டை செய்யவில்லை. காகாசுரனோ ஸீதையினிடம்

பெருத்த அபசாரத்தைச் செய்தான். இராவணனும் முதல் நாட்போரில் '**चचाल चापञ्च मुमोच वीरः**' '*சசால சாபஞ்ச முமோச விர:*' என்னும்படி செயலற்று நின்றான். காகாசுரனும், '**त्रीन् लोकान् सम्परिक्रम्य तमेव शरणं गतः**' '*த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:*' என்றபடியே இராம பிரான் முன்னிலையில் செயலற்று விழுந்தான். செயலற்ற நிலை நோக்கி இராமபிரான் காப்பாற்றுவதானால் இருவரையும் காப்பாற்ற வேண்டும். அல்லது இருவரையும் கொன்றொழிக்க வேண்டும். அதற்குமாறாக, காகாசுரனைக் காட்டிலும் பாபம் குறைந்த இராவணனைக் கொன்றதும், இராவணனைக் காட்டிலும் பாபியான காகாசுரனைக் கொல்லாததும் ஏன் என்று கேட்பார்க்கு, இராவணன் செயலற்று நின்றபோது பிராட்டி அருகில் இல்லாததும், காகம் செயலற்றுக் கிடந்தபோது பிராட்டி அருகில் இருந்ததும்தான், இராவணன் மாண்டதற்கும் காகம் உயிர் தப்பியதற்கும் முறையே காரணம் என்று ஆசார்யர்கள் அருளிச் செய்திருப்பது தெளிவைப் பிறப்பிக்க வல்லது. 'பிராட்டியின் வார்த்தையை எம்பெருமான் கேட்பனோ. அவன் யாருக்கும் வசப்படாத ஸ்வதந்த்ரன் அன்றோ' என்று மேலும் கேட்பார்க்கு ஒன்று கூறித் தெளிவு பிறப்பிக்கலாம். அதாவது, இராவண வதம் முடிந்த பிறகு திருவடி (அனுமான்) ஸீதையிடம் சென்று, 'உன்னை முன்பு நலிந்த இந்த ராக்ஷஸிகளை வதைக்க எனக்கு அனுமதி செய்யவேணும்' என்று கேட்க, 'இவர்களிடம் தயை பாராட்ட வேணும் நீர். உலகத்தில் தவறு செய்யாதவர் யாரும் இலர்' என்று, கூறித் திருவடியைப் பொறுப்பிக்க வில்லையா? பிடித்தது விடாத குரங்கு சாதியில் பிறந்த அநுமானையும் பொறுப்பித்த பிராட்டி தன் சொல்லைத் தட்டாத எம்பெருமானைத் திருத்தி நம் கார்யம் செய்ய மாட்டாளோ? என்பதுதான்.

அவதார காலத்தில் பிராட்டிக்குச் சிறிதுபோது பிரிவென்பது நேருமாகிலும், திருவேங்கடமுடையான் திருமார்பில் இறையும் அகலகில்லாமல் பிராட்டி உறைகின்றாளாகையால், தம் பேறு தப்பாதென்று திருவுள்ளம் பற்றுகிறார் ஆழ்வார். அப்படி தாம் பற்றின புருஷாகார பலத்தால், எம்பெருமானிடத்தில் தலையெடுக்குமவையான வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் (குற்றத்தை நற்றமாகக் கொள்ளுதல், தலைமை, தாழ்ந்தவரோடும் புரையறக்கலத்தல், கண்ணுக்கு இலக்காந்தன்மை) என்னும் நான்கு குணங்களை, 'நிகரில் புகழாய், உலக மூன்றுடையாய், என்னையாள்வானே நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே' என்று முறையே நான்கு ஸம்போதனங்களுள்ள இரண்டு மூன்றாமடிகளால் அருளிச் செய்கிறார். 'புகலொன்றில்லா வடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்ற நான்காமடியால் அப்படிப்பட்ட குணங்களையுடைய திருவேங்கடமுடையானடிக்கீழ் அமர்ந்து புகுகின்றார். (சரணாகதி செய்கிறார்.)

ஆத்மைக்யஜ்ஞானத்தால் மோக்ஷம் உண்டாகும் என்பர் அத்வைதிகள். எம்பெருமானையே தஞ்சமென்று பற்றினால் அவன், கைங்கர்யமாகிற மோக்ஷஸாம்ராஜ்யத்தை அளிப்பான் என்பர் விசிஷ்டாத்வைதிகள். ஆக, பரமாசார்யரான நம்மாழ்வார் இத்திருமலையெம்பெருமானிடத்தில் மிகவும் ஈடுபட்டு, அகலகில்லேன், ஒழிவில் காலம் என்ற பாட்டுக்களினால் முறையே சரணாகதியையும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் செய்து உபாயோபேய நிஷ்கர்ஷம் செய்தருளினாராயிற்று.

இங்ஙனம் கைங்கர்யமே மோக்ஷமென்பதும் அதற்கு எம்பெருமானே தஞ்சமென்பதும் ஆகிய பகவத் ராமாநுஜ ஸித்தாந்தமென்று சொல்லப்படுகிற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் திருவேங்கடமுடையானோடு சேர்த்துச் சிறிது அனுபவிக்கப்பட்டது.

*(இக்கட்டுரை 1958ஆம் ஆண்டு ஏப்ரல் மாத தேவஸ்தான சமய இதழில் வெளியிடப்பட்டது.)*

ஃ

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதலைவிட அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் விரைவான பயனைத் தரும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# தப்பச் சொன்னோம்

திரு. லா. ஸ்ரீநிவாஸன்,
புதுதில்லி.

"பிணங்கியமரர்பிதற்றும்,குணங்கெழு கொள்கையினானே" (திருவாய் மொழி 1-6-4) என்று எம்பெருமானை நம்மாழ்வார் வர்ணிக்கிறார். இதன் கருத்தாவது — பகவானின் அனந்த கல்யாண குணங்களை பரத்வத்தைச் சார்ந்தவையென்றும் ஸௌலப்யத்தைச் சார்ந்தவை என்றும் பிரிக்கலாம். நித்ய ஸூரிகள் ஸர்வேச்வரனின் குணங்களை அநுபவிக்கப் புகுந்தால், ஒருவர் அவனுடைய பரத்வத்தைப் பரக்கப் பேசி, இதுபோல் மற்றோர் குணமுண்டோ? என்பராம். அப்போது மற்றொருவர் அவனுடைய ஸௌலப்யத்தை விசேஷமாக விளக்கி இதனெதிரில் பரத்வம் ஓர் குணமோ? என்பராம். இவ்விதம் ரஸிகத்வத்தினாலே வைகுண்டவாஸிகள் ஒருவரோடொருவர் பிணங்கி பரஸ்பரம் விவாதத்தில் இறங்குவர்களாம்.

வானோர்களுடைய இந்த அநுபவத்தைக் காட்டிலும் நம்மாழ்வாருடைய அநுபவம் அதிவிலக்ஷணமாக இருக்கும். இவர் தம்மில் தாமே பிணங்குமொருவர். அதாவது பகவானின் ஒரு குணத்தை அநுபவித்து இதைப் போல் வேறொன்றுண்டோ என்று ஈடுபடுவர். உடனே வேறொரு குணத்தில் ஆழ்ந்து, கீழ் நாம் அநுபவித்தது இதைப் பார்க்க ஒரு குணமோ? என்பர். இவ்விதமே மேலும் மேலும் செல்வர். ஒவ்வொரு முறையும் 'தப்பச் சொன்னோம்' (தவறாகச் சொன்னோம்) என்று நினைத்துத் தம்மைத் தாமே திருத்திக் கொண்டு செல்வர். இங்ஙனம் இவருடைய அபூர்வ அநுபவம் 'கற்பாரிராமபிரானை' என்ற திருவாய்மொழியில் காணலாம். அதை விவரிப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

'தப்பச் சொன்னோம்' என்பதற்கு ஒரு அழகான உபமானம் பெரியோர் பணிப்பர். சக்ரவர்த்தித் திருமகனின் திருமுக மண்டலத்தின் காந்தியையும் அழகையும் வர்ணிக்கும் வால்மீகி பகவான் चन्द्रकान्ताननं रामं अतीव प्रियदर्शनम् என்றார். பூர்ண சந்திரனைப் போன்ற அழகும் காந்தியுமுடையது இராமனின் முகம் என்று சொல்லி, உடனே தம்முள் யோசித்துப் பார்த்தார். 'என் சொன்னோம்? தப்பச் சொன்னோம். இராமனின் முக காந்தியும் அழகும் இவ்வளவேயோ? பூர்ண சந்திரனைப் போல் ஆயிரம் கோடி அதிகமன்றோ?' என்று நினைத்து अतीव प्रियदर्शनं என்று மேலே சொல்லித் தம்மைத் திருத்திக்கொண்டார். அதாவது, இராமனின் முகம் காண்பதற்கு மிகவும் இனியது என்று இவ்வளவே சொல்லலாமேயன்றி, அது வார்த்தைகளுக்கு நிலமல்ல, வாசாம கோசரம் என்றபடி. இவ்விதமே நம்மாழ்வாரின் அநுபவமும் என்பது இக்கட்டுரையால் விளங்கும்.

> கற்பார் இராமபிரானையல்லால் மற்
> றும் கற்பரோ?
> புற்பாமுதலாப் புல்லெறும் பாதி
> ஒன்றின்றியே
> நற்பாலயோத்தியில் வாழும் சராசரம்
> முற்றவும்
> நற்பாலுக்கு உய்த்தனன் நான்
> முகனார்பெற்ற நாட்டுளே.

புல்லாகிற பதார்த்தம் முதலாகவும், மிக அற்பமான எறும்பு முதலாகவும் இராம குணங்கள் நடையாடும் நல்ல தேசமான அயோத்யா புரியில் வாழ்ந்த ஸ்தாவரஜங்கமங்களானவை எல்லாவற்றையும், தன்னுடைய க்ருபையினால், பிரமன் படைத்த இவ்வுலகுக்குள்ளே, தன்னுடன் சேர்ந்திருப்பதே ஸ்வர்கம், தன்னைப் பிரிந்திருப்பதே நரகம் என்னும்படியான ஸ்வபாவத்தையுடையனவாகப் பண்ணினான் சக்ரவர்த்தி திருமகன்; ஆதலால், உலகில் கற்க விரும்புகிறவர்கள் குணக்கடலாகிய ஸ்ரீராமனைத் தவிர மற்றொரு வ்யக்தியைக் கற்பரோ? என்றபடி.

यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना - உன்னுடன் கூடியிருப்பதே எனக்கு ஸ்வர்க்கம், உன்னைவிட்டுப் பிரிந்திருப்பது நரகம் என்று ஸீதை இராமனிடம் சொன்னது போல, திருவயோத்தியிலுள்ள சராசரங்கள் யாவையும் இராமனுடன் கூடியிருப்பதையே ஸ்வர்கமாகவும் அவனைப் பிரிந்திருப்பதே நரகமாகவும் கருதும் தன்மையுடையனவாயிருந்தன. இங்ஙனே தன்னுடைய குணங்களால் அவைகளை ஈடுபடச் செய்தானே, இது வன்றோ உயர்ந்த குணம்! என்று ஆழ்வார் ஆழங்கால் படுகிறார்.

தசரதன் இராமனை யௌவராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பண்ணுவதாக ப்ரஸ்தாவிக்க, பௌரஜனங்கள் बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते என்றும், பிறகு இராமன் அரசாண்ட போது

> रामो रामो राम इति प्रजानामभवत्कथाः ।
> रामभूतं जगदभूत् रामे राज्यं प्रशासति ॥

என்றும் அவன் குணங்களைக் கொண்டாடினார்கள். இராமன் காட்டுக் கெழுந்தருளும்போது अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुरकोरकाः என்று மரங்களெல்லாம் வாடின; அதுவே இராமன் திரும்பி வந்ததும் अकालफलिनो वृक्षाः सर्वे चापि मधुस्रवाः என்று மரங்கள்

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (அச்சில்) (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலை யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலை) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 4—50 |
| 8. கண்ணன் பேசுகிறன் —நஜன் | 0—50 |
| 9. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 10. முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |
| 11. திருப்பாவை (அச்சில்) | |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

மது தாரைகள் பாய்ந்து அகாலத்தில் பழங்களுடன் குலுங்கின. இவ்விதம் சராசரங்கள் அவனிடம் ஈடுபட்டிருந்தன என்பது இங்கு அறியத்தக்கது.

'மற்றும் கற்பரோ?' என்பதால் மற்ற தேவதைகளைச் சொல்லவில்லை, பகவானின் பரம், வ்யூஹம் முதலிய மற்ற ரூபங்களையும் மற்ற அவதாரங்களையும் விலக்குகிறார் என்று இங்கு ஆசார்யர்களின் வ்யாக்யானம். भावो नान्यत्र गच्छति என்று ஹநுமார் வைகுண்டம் போகவும் விரும்பாதது போலவும், 'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று திருப்பாணாழ்வார் அருளியது போலவுமாம் இது என்பர்.

நாட்டில் பிறந்தவர்நாரணற் காளன்றி யாவரோ?
நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டையளித்து உய்யச்செய்து நடந் தமை கேட்டுமே.

தன் வாசியறியாத இக்கொடிய உலகத்திலே வந்து பிறந்து, ஸம்ஸாரிகளும் அநுபவிக்காத க்லேசங்களை அநுபவித்து, செய்த நன்றியறியாத மனிதர்களுக்காக, உலகத்தை ஹிம்ஸிக்கிறராவணாதி ராக்ஷஸர்களை தேடிச் சென்று கொன்று, இங்ஙனம் நாட்டை ரக்ஷித்து வாழ்வித்துப் பிறகு திருவயோத்தியிலுள்ள ஸகல சராசரங்களையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு பரமபதம் எழுந்தருளியபடியைக் கேட்டிருந்தும், அப்பெருமானுடைய திருக்குணங்கள் நடையாடுகிற நாட்டிலே பிறந்தவர்கள், நாராயணனான அந்த ஸ்ரீராமனுக்கு அல்லது மற்றொருவருக்கு ஆட்படுவர்களோ? என்றபடி.

இப்போது சொல்லும் குணத்தைப் பார்த்தால் கீழே சொன்னது குண ஹாநி என்று தோன்றும் என்று இங்கு ஆசார்யர்களின் வ்யாக்யானம்.

அதாவது தன்னிடம் எல்லோரையும் ஈடுபடச் செய்துவிட்டு அவர்களை விட்டுத் தான் தனியே பரமபதம் எழுந்தருளியிருந்தால் அது அவர்களைப் படுகொலை செய்தது போலாகும். அங்ஙன்றியே 'அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி' என்று குலசேகராழ்வார் அருளியபடியே அவர்கள் யாவரையும் தன்னுடன் ஸ்ரீ வைகுண்டத்துக்கு அழைத்துச் சென்றானே, இதன்றோ மஹாகுணம்! என்று ஆழ்வார் போற்றுகிறார்.

நாட்டில்—இந்த ப்ராக்குருத பூமியில் யஜ்ஞம் செய்தால், தேவதைகள் தரையில் கால்படக் கூடாதென்று உயர இருந்து ஹவிஸ்ஸை வாங்கிக் கொள்வர்களாம். அவ்வளவு அருவருப்பாம் அவர்களுக்கு இந்த பூமியினிடம். அவர்களுடைய தேவலோகத்தை நித்ய ஸூரிகளும் அப்படியே அருவருப்பர்களாம். அந்த நித்ய ஸூரிகளின் நாதன் இவர்களெல்லாம் வெறுக்கும் நாட்டில் வந்து பிறந்தானே! என்றபடி. மற்றவர்கள் பத்து மாதம் கர்ப்பவாஸம் செய்தால், இவன் பன்னிரண்டு மாதம் இருந்தானே! என்றுமாம்.

படாதனபட்டு,

**राज्याद्भ्रंशो वने वासः सीता नष्टा हतो द्विजः ।**
**ईदृशीयं ममालक्ष्मीः निर्दहेदपि पावकम् ॥**

என்று இராமனே சொல்லியபடி, ராஜ்யத்தைவிட்டு வெளியேறுதல், வனவாஸம், அங்கும் கூடியிருக்க வொண்ணாமல் ஸீதையுடன் பிரிவு, அவளைக் காப்பாற்ற முயன்ற ஜடாயுவின் மரணம்—இவ்வித துரத்ருஷ்டங்கள் நெருப்பையும் சுடும் என்றபடி.

இராவண வதம் முடிந்ததும் பிரமன் ப்ரார்த்தித்தபடி உடனே பரமபதம் சொல்லாமல் திருவயோத்திக்குத் திரும்பி வந்து வருந்தின தாய்மார்களையும் பரதனையும் மற்றவர்களையும் தேற்றி அவர்களுடன் வெகு நாள் இருந்து பிறகு யாவருடனும் வைகுந்தம் எழுந்தருளினார் என்பதும் இங்கு குறிக்கத் தக்கது.

**கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ?**
**கேட்பார் செவி சுடுகீழ் மைவசவுகளே வையும்**
**சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன், திருவடி**
**தாட்பாலடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே.**

எம்பெருமானுடைய நிந்தைகளையே காதாரக் கேட்க வேணுமென்கிற விருப்பமுடையர்வகளுக்கும் கூட ஸஹிக்க வொண்ணாத கர்ண கடோரமான மிகத்தண்ணிய வசவுகளையே வையும், நெடுங்காலத்துப் பகைவனான சிசுபாலனும்கூட ஸ்வாமியான கண்ணபிரானுடைய திருவடிகளிலே ஸாயுஜ்யம் பெற்றபடியை அறிவாரை அறிந்து வைத்தும், நல்லது கேட்க வேணுமென்றிருப்பவர்கள் எம்பெருமானுடைய கீர்த்திகளை ஒழிய வேறொன்று கேட்பரோ? என்றபடி.

எம்பெருமான் தன்னை விட்டுப் பிரிய முடியாதபடி ஈடுபட்டவர்களுக்கு மோக்ஷம் கொடுத்தது ஒரு ஏற்றமோ? தனக்கு சத்ருவாய், தன்னை மனம் போனபடி கடுமையாக தூஷித்த சிசுபாலனுக்குமன்றோ அதே மோக்ஷத்தைக் கொடுத்தான். இதுவன்றோ மஹா குணம்! என்று ஆச்சர்யப்படுகிறார் ஆழ்வார்.

'பல பல நாழம் சொல்லிப் பழித்த சிசுபாலன்' (பெரியாழ் 4-3-5) என்றும் 'வைது நின்னை வல்ல வாபழித்தவர்க்கும்' (திருச்சந்த விருத்தம் 111) என்றும் சொல்லப்பட்ட சிசுபாலனுக்கும், **रिपूणामपि वत्सलः** சத்ருக்களிடமும் வாத்ஸல்யமுடையவன் என்று சொல்லப்பட்ட ஸர்வேச்வரன், 'பித்தனைப் பெற்றுமந்தோ பிறவியில் பிணங்குமாறே!' (திருமாலை 4) என்றும் **मुखः सायुज्यदोऽभूः** (மோக்ஷத்தைக் கொடுக்கும் பித்தனானாயே) என்றும் ஸ்தோத்ர ரத்னத்தில் ஆளவந்தார் அருளியபடியும், தன் திருவடியின்கீழ் ஸாயுஜ்யம் அளித்தான் என்பது உணரத்தக்கது.

**தன்மையறிபவர்தாம் அவற்காளன்றி ஆவரோ?**
**பன்மைபடர் பொருள் ஆதுமில் பாழ் நெடுங்காலத்து**
**நன்மைப்புனல் பண்ணி நான் முகனைப் பண்ணி, தன்னுள்ளே**
**தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே.**

பல வகைப்பட்ட விரிவான பதார்த்தங்கள் ஒன்றுமில்லாதபடி வெகு காலம் சூன்யமாயிருந்த போது, நன்மை மிகுந்த காரணபூத ஜலத்தை முந்துற முன்னம் ஸ்ருஷ்டித்து, பிறகு பிரமனைப் படைத்து, தன்னுடைய ஸங்கல்பத்தில் ஏக தேசத்தாலே பண்டு தான் ஸம்ஹரித்த மநுஷ்யாதிகளை யெல்லாம் பழையபடி உண்டாக்கின இந்த மஹா குணங்களைச் சிந்தனை செய்து அவனுடைய அஸாதாரண லக்ஷணத்தை அறியவல்லார்கள் அப்பெருமானுக்கன்றி வேறொருவர்க்கு அடிமைப்படலாகுமோ? என்றபடி.

ஏற்கனவே இருந்த ஒரு சிசுபாலன் தன்னைப் பழித்ததைப் பொறுத்துக் கொண்டான் என்பது ஒரு ஏற்றமோ? அழிந்து போயிருந்த பல சிசுபாலர்களை மறுபடியும் உண்டாக்கி அவர்களால் தன்னை வைவித்துக் கொண்டானே, இதுவன்றோ மஹா குணம்! என்று ஆழ்வார் ஆச்சர்யப்படுகிறார்.

ஸம்ஸாரிகளில் பெரும்பாலோர் சிசுபாலனில் குறைந்தவர்களல்லர் என்று இங்கு ஆசார்யர்களின் வ்யாக்யானம். அப்படிப்பட்டவர்கள் ப்ரளயத்தில் மழுங்கிக் கிடக்க, அவர்கள் அப்படியே அழிந்து போகட்டும் என்று இராமல், கேவலம் தனது க்ருபையால், ஸ்ருஷ்டியில் அவர்களுக்கு மறுபடியும் சரீரங்களையும் கரணகளேபரங்களையும் கொடுத்தருள, பின்னையும் அவர்கள் முன்போல் பகவந்

# விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூலமாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தங்கள் முகவரியினை ஆங்கிலத்திலெழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத்தில் மணியார்டர் எண்,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங்களுடன் தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண்டால் விரைவில் செயலாற்ற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத்துழைப்பையும் எதிர்பார்க்கிறோம்.

— ஆசிரியர்.

நிந்தையிலே பொழுது போக்குவர்களாம்! ஒரு வேளை அவர்கள் திருந்துவார்களோ என்ற ஆசையினால் இதற்கும் இடம் கொடுத்த ஔதார்யம் என்னே! என்று அதிசயிக்கிறார் ஆழ்வார்.

சூழல்கள் சிந்திக்கில் மாயன்
கழலன்றிச் சூழ்வரோ?
ஆழப் பெரும்புனல் தன்னுள் அழுந்திய ஞாலத்தை
தாழப்படாமல் தன்பால் ஒரு கோட்டிடைத் தான் கொண்ட
கேழல் திருவுருவாயிற்றுக் கேட்டு
முணர்ந்துமே.

எல்லையற்ற ப்ரளய ஜலத்திலே மிக ஆழமாக பூமி அமிழ்ந்து கிடக்க, வேறு பூமியை ஸ்ருஷ்டித்துக் கொள்வோம் என்று அதை அலக்ஷ்யம் செய்து நசிக்க விடாமல், யாவரும் அருவருக்கக் கூடிய வராஹரூபம் தரித்து தன் திருமேனியில் ஏகதேசமான கோட்டினிடத்திலே தானாகவே இடந்து எடுத்துக் கொண்டதை இதிஹாஸ புராண முகங்களாலே கேட்டும், மனனம் பண்ணியும் வைத்து, தம்முடைய விருப்பங்கள் ஸித்திப்பதற்கு வழி பார்க்குமளவில், ஆச்சர்ய சேஷ்டிதனான அப்பெருமானுடைய திருவடிகளை யொழிய வேறொன்றை ஆச்ரயிப்பரோ? என்றபடி.

உலகைத் திரும்பவும் ஸ்ருஷ்டித்தான் என்று கீழே சொன்னது ஒரு குணமோ? பரமபதத்தில் தன் இருப்பு குலையாமல் கேவலம் ஸங்கல்பத்தினால் படைப்பை நடத்தினான். அது போலல்லாம் நீருக்கும் சேறுக்கும் இறாய்க்காத, 'மானமிலாப் பன்றி' என்று யாவரும் வெறுக்கக் கூடிய உருவத்தை எடுத்துக் கொண்டு இவ்வுலகை ப்ரளயத்தினின்றும் மீட்டதன்றோ மஹா குணம்! என்று ஆழ்வார் கொண்டாடுகிறார்.

கேட்டு முணர்ந்தவர் கேசவற்காளன்றி
யாவரோ?
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்க
வாதிப்புண்டு
ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்
தார்க்கு இடர் நீக்கிய
கோட்டங்கை வாமனனாய்ச் செய்த
கூத்துக்கள் கண்டுமே.

ஒருக்காலும் குறையாத ஔதார்யத்தையுடைய மஹாபலி தன் செருக்காலே நலிய ஹிம்ஸைப்பட்டு இரண்டு சென்று ப்ரார்த்தித்த தேவர்களுடைய இடரை நீக்கி, அவர்கள் அரசைத் திரும்ப அவர்களையே அடையச் செய்வதற்காக ஏற்ற கையையுடைய ஸ்ரீ வாமனமூர்த்தி செய்த யாசித்தல் முதலான மனோஹர சேஷ்டிதங்களை அநுஸந்தித்து வைத்தும், புராண முகத்தாலே கேட்டும், அறிவுடையராயிருந்தவர்கள் அப்பெருமானுக்கல்லது மற்றொருவருக்கு அடிமை யாவரோ? என்றபடி.

வராஹ உருக்கொண்டு பூமியை இடந்தது ஒரு குணமோ? महावराह: स्फुट-पद्मलोचन: என்ற ஸ்ரீ விஷ்ணு புராண வசனத்தின்படியே பரத்வஸூசகமான தாமரைக் கண்ணுடன் இருந்தார் வராஹப்பிரான். அவரை யஜ்ஞரூபியாகவும் மேற்படி புராணம் வர்ணிக்கிறது. பூமி தேவியும் ரிஷிகளும் அவரைத் தோத்திரஞ்செய்தனர். ஆக, அருவருக்கத் தக்க வராஹ உருவம் என்று நாம் நினைத்தாலும், உண்மையில் அவன் பரத்வம் குலையாமலிருந்தான். அங்ஙனன்றியே, ச்ரிய:பதியாய், ஸர்வ ஐச்வர்யமுமுடையவனாய், 'அலம்புரிந்த நெடுந்தடக்கை' என்றபடி எப்பொழுதும் கொடுத்தே வளர்ந்த திருக்கையையுடையவன் ஒருவனிடம் யாசித்தான், அதுவும் தன்னதான பூமியை யாசித்தான், அதுவும் தனக்காகவன்றி தன்னை யாசித்த இந்திரனுக்காக யாசித்தான் என்ற இது வன்றோ மஹா குணம்! என்று வியக்கிறார் ஆழ்வார்.

இந்திரன் எம்பெருமானைச் சரணமடைய, பகவான் அவனைப் பார்த்து 'மஹாபலி ஒரு யாகம் பண்ணப் போகிறான், அதில் அவன் யார் எதைக் கேட்டாலும் கொடுப்பான், நீ அவனை யாசித்தால் உன் ராஜ்யம் உனக்குக் கிடைத்துவிடும்' என்று அருள, இந்திரன் 'எனக்கு ராஜ்யமில்லாவிட்டால் போகட்டும், ஈனத் தொழிலான யாசகத்தை நான் செய்ய மாட்டேன்' என்று தீர்மானமாகமறுக்க, அப்போது ஆச்ரிதவத்ஸ

(37-ஆம் பக்கம் பார்க்க)

தேவர் குறளும் திருநான் மறை
முடிபும்
மூவர் தமிழும் முனிமொழியும்—
கோவை
திருவா சகமும்திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

இப்பாடலில் எண்மர் சுட்டப் படு கின்றனர். இவர்களுள் மூவர் யாவ ரெனில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய தெய்வ மாககவிஞர்களாவர். இவரு டன் திருக்கோவையார், திருவாசகம் அருளிய மணிவாசகரையும் சேர்த்து சைவசமயக் குரவர் நால்வர் என்பர். இவர்கள் இறைவன் அருளால் திருவ வதாரம் செய்திராவிட்டால் திருநீறு, நான்மறை, பஞ்சாட்சரம் முத லானவை சமணப்புயலால் மறையுண் டிருக்கும் என்பர்.

# மூவர் தமிழ்

''சொற் கோவும் தோணிபுரத் தோன்ற
லும்எம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—
முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல்
தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே?''

என்று வினா எழுப்பினர். இவ்வினா விற்கு விடையாகத்தான் இவர்களின் தமிழைக் கொண்டு பஞ்சாட்சரம், திருநீறு, மாமறைநெறி இவைகளை நாம் போற்றிக்காத்து மகிழ்ந்து வாழ்கிறோம்.

மூவர் தமிழ்ப்பாக்கள் நம் வாழ்க் கைக்கு உறுதுணையாய் இருந்து வளம் படுத்தும் வன்மை பெற்றவை. மைவிழியார் மனையகல வைப்பவை. மனைவியுடன் மனையறத்தில் மாண் புடையதாக்குபவை. மூர்க்கரோடு இணங்க வைக்காதவை. நல்லாசா னாக இருந்து வழிகாட்டுபவை. மோகத்தை முனிவிப்பவை, போகத் தைத் தக்காங்கு தருபவை. தியாகத் தின் உணர்வை உண்டு பண்ணுபவை. எல்லோரும் ஒரு குலம் என்ற நல்லோ ராய் ஆக்குபவை. ஆன்மாக்கள் ஈடேற மேன்மக்கள் சொற்களைக் கேட்க வைப்பவை. உத்தமனாயிருந்து ஊருடன் கூடி உலகப் புகழுடன் வாழ வைப்பவை. பேத மகன்று, வேதநெறி காத்து, சைவத்துறை நின்று, நன்மை கடைப்பிடித்து, நாடு ஒப்பன செய்து வாழ வைக்கும் கல்விச் சாலையாய்த் திகழ்பவை.

நம் உடலியல், நம் உயிரியல், நம் உளவியல், நம் இறையியல், நம் இசையியல், நம் அரசியல், நம் நாக ரிக இயல், நம் நன்றியியல், நம் இல் லற இயல், நம் இறை வழிபாட்டியல், நம் திருக்கோயில் இயல், நம் திரு விழா இயல், நம் கொடை வள்ளல் கள் இயல், நம்புலவர் இயல், நம்புர வலர் இயல், நம் மகளிரின் மாண் பியல், நம் நிலவளவியல், நம் அந் தணர், யோகியர், ஞானியர், சமய வாதியர், புறச் சமயவாதியர் இயல் கள் ஆகியன மூவரின் தமிழில் கண்டு கண்டு இன்புறலாம். தமிழாய்ந்த பெரியோர்கள் இன்புறும் வண்ணம் பற்பல கற்பனை வளப் பாடல்களை யும் பார்த்து மகிழலாம். படித்து மகிழலாம். பாடி மகிழலாம்.

மூவர் அருளிய தமிழில் செல் லரித்தது போக இக்காலத்திற்கேற்ப நமக்குக் கிடைத்தவை எண்ணா யிரத்து இருநூற்றைம்பது பாடல்கள் தான். இவற்றில்தான் அப்பப்பா! எத்தனை பெரிய தத்துவங்கள்? எவ் வளவு சாத்திரக் கருத்துக்கள்? மூவ ரின் தமிழ்ச் சுரங்கம் என்றால் மிகை யாகாது. ஒவ்வொரு துறையினருக் கும் அவரவர் விரும்பும் பொருள்கள் கிடைத்த வண்ணம் இருக்கும். மூவர் தமிழில் கற்பனை நயம் மட்டும் ஒன் றிரண்டு ஈண்டுக் காண்போம்.

ஆங்கிலக்கவி ஓர்ட்ஸ் ஓர்த்தும், அமெரிக்கக்கவி விட்மன்னும் இயற் கையை வருணிப்பதில் இணையற்ற வர்கள் என்பர். ஆனால் இவர்களை விட எண்ணாயிரம் மடங்கு மேலான தாக மூவர் தமிழிலும் இயற்கை வருணனை நயங்களைக்கண்டு களிக் கலாம்.

சம்பந்தர் தமிழ் :

**ஆகுதி :**

மருத நிலம், செந்தாமரைத் தடாகம், அதன் கரையில் மாமரம், அதில்காய் பழுத்துசாறு ஒழுகுகிறது. அதுமாவிலையில் விழுகிறது. விழுந்த சாறு செந்தாமரை மலர்மேல் விழு கிறது.

இது வேள்வித்தீயில் அந்தணர்கள் மாவிலையினால் நெய் வார்ப்பது போல் உள்ளது என்கிறார் காழி வேந்தராகிய கவுணியர்குலத் திலகம்.

யானை :

திருவண்ணாமலை. அம்மலைச் சாரலில் பெண் யானை காணாமல் போய்விட்டது. ஆண் யானை அல் லற்பட்டது. அலைந்து தேடியது. முயற்சி வெற்றி தந்தது. பெண் யானையைக் கண்டது, அழைத்து வந்தது. இரண்டும் ஒன்றாக உறங் கின. தலைவன் தனது தலைவியுடன் தான் படுத்து உறங்க வேண்டும் என்ற தமிழனின் தலையாய பண்பை யல்லவா சம்பந்தர் நமக்கு அஃறிணை யாகிய யானையின்வழி நினைவூட்டு கிறார்.

*திரு ச. சுந்தரேசன்-சிதம்பரம்.*

''பிழைத்த பிடியைக் காணாதோடிப்
பெருங்கைமத வேழம்
அழைத்துத் திரிந்தங் குறங்கும் சாரல்
அண்ணாமலை யாரே.''

அன்னம் :

அன்னமாகிய அரசன் தாமரை யாகிய சிம்மாசனத்தில் அமர்ந் திருக்க, இலை குடைபிடிக்க, செந் நெற்கதிர்கள் சாமரம் வீசுகின்றன என்கிறார். என்ன அழகான உரு வகம்.

## விதி

இன்று என்பதைப் பற்றிப் பிடித்துக் கொள். ஏனென்றால் நாளை என்பது விதியின் கைக்குள் இருக்கிறது. —இக்பால்.

நீ தத்துவ ஞானியாக இரு. ஆனால் தத்துவ ஞானத்தினிடையே மனிதனாகவும் இரு. —ஹியூம்.

## தெய்வ குணம்

பிறர் துன்பம் கண்டு வருந்துதல் மனித குணம், துன்பத்தை நீக்குதல் தெய்வ குணம். — மான்.

## அருள் விருந்து

மக்களைத் தெய்வமாகப் பாவிக்கின்ற மனோ பாவனை உடையவர்களே மக்களுக்குச் சிறந்த தொண்டு புரிய முடியும்; மற்றவர்கள் மக்களுக்குச் செய்யும் தொண்டுகள் வெறும் ஆரவாரமேயாகும்.

## தூய மனச்சாட்சி

தூய மனச்சாட்சியை வளர்ப்பதில் உணவுக்கும் ஒரு முக்கிய பங்கு உண்டு. சாத்வீக உணவு மனிதனுக்குத் தூய மனச்சாட்சியை அடைய உதவி புரிகிறது. புலாலுணவு மனச்சாட்சியை அசுத்தமாக்குகிறது. அது மனச்சாட்சிமீது கெட்டியான ஓட்டையை உண்டு பண்ணி அதை முழுதும் மழுங்கடித்து விடுகிறது.

## சமாதானமாக வாழ வழி

நீங்கள் இவ்வுலகில் சமாதானமாக வாழ விரும்பினால் எவரிடமும் அதிகமாக நெருங்கிப் பழகாதீர்கள். சந்தர்ப்பம், இடம் ஆகியவற்றுக்குத் தகுந்தபடி உங்களை அமைத்துக் கொள்ளுங்கள். பிறர் குற்றங்களை மன்னித்துப் பொறுமையோடிருங்கள். பிறர் மனம் வருந்தும்படியான கடுஞ்சொற்களையோ ஆபாசமான வார்த்தைகளையோ சொல்லாதீர்கள்.

## ஆன்மீக பலம் பெற வழி

வீண் வாதங்களைவிட்டு, ஆத்மா அல்லது இறைவனைக் குறித்து ஆராயத் தொடங்குங்கள். நீங்கள் அளவற்ற ஆன்மீக பலத்தைப் பெறுவீர்கள்.

—சுவாமி சிவானந்தர்

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

“ செறியிதழ்த் தாமரைதவிசில் திகழ்ந்
தோங்கும் இலைக்குடைக் கீழ்ச்
செய்யார் செந்நெல்
வெறிகதிர்சா மரம்இரட்ட இள
அன்னம் வீற்றிருக்கும் மிழலை
யாமே”.

(செறியிதழ் - நெருங்கிய இதழ், தவிசு - ஆசனம், செய்யார் - வயலில் உள்ள, வெறி-மனம். இரட்ட - வீச).

அப்பர் தமிழ் : நாகம் :

இளம்பெண் ஒருத்தி பசும்புல் தரையில் படுத்திருக்கிறாள். அவள் பக்கத்தில் ஒரு பாம்பு வருகிறது. அவளின் நீண்ட பெரிய கூந்தலைத் தன் இனமான பாம்புதானோ என்று ஐயுற்றுப் பார்க்கிறது. அவள் இதைக் கண்டு அஞ்சி எழுந்து நிற்கிறாள். நின்றவுடன் தனக்கு எதிரியான மயில்தான் நிற்கிறதோ என்று பாம்பு ஐயுற்றும் அஞ்சியும் புறத்தே ஓடியது. இப்படியாகப் பாம்பு இவளைக் கண்டும், இவள் பாம்பைக் கண்டும் அஞ்சிய காட்சியை, சிவபெருமான் தலையில் கங்கையருகேயுள்ள பிறையும், அதன் அருகேயுள்ள நாகமும் பார்த்து “இது என்ன அறியாமை? உண்மை உணராமல் நாகம் அஞ்சுகிறதே” என்று சிரிக்கின்றனவாம். நங்கையும் அஞ்சுகின்றனளே என்று நகைக்கின்றனவாம்.

“ கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்
கிடந்தபாம் பவளையோர் மயிலென்
றையுறக்
கிடந்த நீர்ச் சடைமிசைப் பிறையும்
ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில
வீரரே”.

(பேதுற - அஞ்ச, ஐயுற - சந்தேகம் கொள்ள, பிறையும் - உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. முன்பு நாகம் இப்போது பிறையும். நகுதல் - சிரித்தல், கெடில வீரர் - திருவதிகை வீரட்டானேஸ்வரர்).

சுந்தரர் தமிழ் : மயில் :

கலையநல்லூரில் அழகிய பூம்பொழில், அதன் அருகே நெல் வயல், கரும்புவயல் பொழிலின் அரும்பருகேவுள்ள மலரில் இருந்த தேனையருந்திய ஆறுகால் வண்டினங்கள், பண் பாடுகின்றன. பாடற்கேற்ப அழகிய மயில்கள் குழுநடனம் ஆடுகின்றன. கரும்பு வயலில் உள்ள கருங்குவளை மலர்கள் கண் விழித்துக் கண்டு மகிழ்கின்றன. நெல் வயலிலுள்ள செந்தாமரை மலர்கள் முகமலர்ந்து காட்சி தருகின்றன.

“ அரும்பருகே சுரும்பருவ அறுபதம்
பண்பாட
அணிமயில்கள் நடமாடும் அணி
பொழில்சூழ் அயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளரும் கழனிக்
கமலங்கள் முகமலரும் கலைநல்லூர்
தானே”.

இவை போன்ற எண்ணற்ற கற்பனை வளங்களை மூவர் தமிழில் கண்டுகளிக்கலாம். மூவர் தமிழை யாவரும் ஓதியுணர்ந்தின்புறுவோமாக.



# சுந்தர காண்டத்தின் பெருமை

எவ்வாறு தேவர்களில் ஸ்ரீ ராமன் உத்தமனோ, விருட்சங்களில் கற்பக விருட்சம் ஈடு இணையற்றதோ, ரத்தினங்களில் கௌஸ்துபம் சிறந்ததோ அவ்வாறே ராமாயணத்தின் சிறந்த பகுதி சொல்லின் செல்வனும், நித்தியப் பிரம்மச்சாரியும், மகாவீரனுமான ஸ்ரீ அனுமானின் ஆற்றலை விளக்கும் ஐந்தாவது காண்டமான ஸ்ரீ சுந்தரகாண்டமாகும்.

ஆஞ்சனேயனின் மதி நுட்பத்தையும், வல்லமையையும், நெருக்கடிகளைச் சமாளித்த சமயோகித புத்தியையும், கடல் கடந்து இலங்கை சென்றடைந்த செயற்கரிய செயலின் அழகையும் விளக்குகிறது இக்காண்டம்.

அந்த ராமதாசன் வன்மருங்குல் வாளரக்கியர் நடுவில் "இற்பிறப்பு என்பதொன்றும் இரும்பொறை என்பதொன்றும், கற்பெனப்படுவதொன்றும்" சீதா பிராட்டியின் உருவில் களிநடம் புரிந்ததைக் கண்டு எப்படி இத்தெய்வத்தைப் பிரிந்து ராகவன் அங்கே உயிரோடிருக்கிறான் என்று அதிசயித்த அழகும் இக்காண்டத்தில்தான்.

சோகத்திற்கே இடமில்லாத இயற்கையின் வனப்பும் வல்லமையும்ஒன்று சேர்ந்த இடமான அசோக வனத்தில் ஒரு பெண் துறவியாகக் காட்சியளிக்கிறாள் அன்னை ஜானகி. இயற்கை அழகைப் பெரிதும் விரும்பியவள் அல்லவோ அவள்! பின்னாளில் ஸ்ரீ ராமரின் பட்டாபிஷேகத்தின் போது பலவித ஆடை அணிகலன்களுடன் ஜானகியைக் காணும் வாய்ப்பு அனுமனுக்குக் கிடைத்த போதும் இங்குதான் முதன் முதலில் அவளது ஒப்பனையற்ற தெய்வீக அழகைக் காண்கிறான் அவன்.

அசோக வனத்தில் ராவணனின் கட்டான மேனியழகைப் பெரிதும்-பாராட்டுகிறான்அஞ்சனை குமாரன். அழகு எதிரியிடத்து இருந்தாலும் அழகு அழகுதான் என்ற நோக்கோடு இந்தச் சுந்தரம் மனச்சுத்தி உள்ள ஒருவனுக்கே இயலும் என்பதும் இக்காண்டத்தில் வெளியாகிறது.

இலங்கேசுவரனான ராவணன் சீதையிடம் அசோக வனத்தில் தன் கெட்ட எண்ணத்தை வெளியிட்ட பொழுது கற்பின் கனலான சீதை அடக்கத்துடனும், கருணையுடனும் உறுதியான மனத்துடனும் ஸ்ரீ ராகவனின் வீரத்தை ராவணனிடம் எடுத்தியம்பும் அழகு இக்காண்டத்திற்கு அழகூட்டுகிறது. ராவணன் காட்டிய செல்வங்களில் அவள் மயங்கவில்லை. பிரிவு முன்னிலும் அதிகமாக அவளை ராமனைப் பற்றியே எண்ணச் செய்தது.

சீதை பிரகிருதி, ராமன் புருஷன் என்பர். பொன்மான் என்ற சஞ்சல புத்தியின் பின் சென்ற காரணத்தால் ஜீவாத்மாவாகிய சீதை சிறிது காலம் பரமாத்மாவாகிய ராமனை விட்டுப் பிரிந்து அசோகவனத்தில் தவமிருக்க வேண்டி வந்தது எனலாம். இவ்வரிய பாரமார்த்திகத் தத்துவம் வெளிப்படுவதும் இக்காண்டத்தில் தான்.

"வரும் வரும் என்பதோர் தூணி வாற் கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்களால்" (கம்பர் வாக்கு) சீதாபிராட்டி நம்பிக்கை, சோகம் இவற்றுக்கிடையே ஊசலாடும் அழகை வெளிப்படுத்துகிறது இக்காண்டம். சிறை கிடந்தபோதும் அக்கிரமத்தை அழித்து பராக்கிரமத்தை வெளிப்படுத்தி மனைவியை மீட்டுச் செல்வதே தசரத ராமனுக்கு உகந்த செயல் என்று வைதேகி தன் சீரிய மனப்பாங்கை அனுமனிடம் வெளிப்படுத்துவதும் ஓர்அழகேயாம்.

இன்னல்களுக்கிடையே இருப்போருக்கு ஒரு சிறிய நற்செய்தி கிடைத்தாலும் பெரிய ஆறுதலாக அது அமையும் என்பது யாவரும் அறிந்த உண்மை. மேலும் தொலைந்த பொருள் மீண்டும் கிடைத்திடும் போது பெற்றிடும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. அதே போன்று ராமன் விரைவில் வருவான் என்ற செய்தியை அனுமான் சீதையிடம் தெரிவிப்பதும் இக்காண்டத்தில் தான்.

**திரு. கே. எஸ் நாராயணன்**
திருநெல்வேலி.

தன் வல்லமையையும் காட்டவேண்டும், எதிரியின் வலிமையையும் உணர வேண்டும். ராவணனின் போக்கும் தெரிய வேண்டும் என விரும்பிய வாயு புத்திரனுக்கு பதிலை அளிக்கிறது, "குரங்கைப் பிடித்துக் கொல்க" என்ற ராவணனின் கட்டளை. அசோக வனத்தைப் பாழ்படுத்தி, லங்காபுரியைத் தீக்கிரையாக்குகிறது அனுமனின் வீரம் - அழகான செயல் தான். ஆனால் சினத்தின் காரணமாகப் பிறந்த செயல் தானே இது. சீதையும் அத்தீயில் அழிந்து போயிருப்பாளோ என்ற கவலை பின்னர் தோன்ற, தன்னையே நொந்து கொண்டு சீதையை மீண்டும் சென்று பார்த்த பின்னரே அமைதி பெறுவதும் ஒரு சுந்தரமான காட்சி தான். பின்னாளில் ராமபாணம் நிச்சயமாக ராவணனை மாய்க்கப் போகிறது; அதற்கேற்ற நல்லசந்தர்ப்பத்தை ஏற்படுத்தியவன் அனுமன் அன்றோ!

இல்வாழ்க்கை வாழும் மனிதனுக்கு வாழ்வில் தோன்றும் கஷ்ட நஷ்ட

# நித்ய அபிஷேக ஸேவை

**யா**த்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 42/- செலுத்துதலோ அல்லது தேசியமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி". எனும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்தலோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ. 42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி. மீ. தொலைவில் ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்த்தம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகிறது.

---

களைக் களைய பிறர் உதவி அவசியம். பிரம்மச்சாரிக்கு இத்தகைய சிக்கல் இல்லை. நித்தியப்பிரம்மச்சாரியாகிய ஆஞ்சனேயனின் துணை கொண்டு ராமன் தீவினையாகிய ராவணனை மாய்க்க முடிகிறது. நித்தியப் பிரம்மச்சாரி ஒருவனின் ஒழுக்கத்தில் அமைந்திருக்கும் அழகு மற்ற அழகுகளை எல்லாம் வென்று விடுகிறது எளிதாக.

மேன்மை பொருந்திய சுந்தரகாண்டத்தை பக்தியுடனும், சிரத்தையுடனும் அறுபத்தெட்டு தடவை அறுபத்தெட்டு நாட்களில் பாராயணம் செய்து முடிப்பவனிடம் ஸ்ரீராமன் சுக்கிரீவனிடத்தில் நட்புரிமை கொண்டு அனுக்கிரகித்தது போல் அனுக்கிரகம் புரிவார். சர்வாபீஷ்டங்களும் சித்திக்கும். குடும்பத்தில் கலகம் இல்லாது போகும்; துர்மரணம் சம்பவிக்காது. பொதுவான பலன்களைத் தவிர விரும்பியதைப் பெற சுந்தரகாண்ட பாராயணம் உதவுமா என்ற கேள்விக்கும் உதவும் என்ற பதில் கூறப்பட்டிருக்கிறது. உதாரணத்திற்குச் சிலவற்றைப் பார்ப்போம்.

சம்சார சாகரத்தைக் கடக்க விரும்புகிறவன் ஆறு மாதங்கள் விடியற் காலையில் சுந்தரகாண்டத்தின் முதல் ஸர்க்கமான 'ஆஞ்சனேயர் சமுத்திரத்தைத் தாண்டுதலை' (ஹனுமதஹ ஸமுத்ரதரணம்)ப் படிக்க வேண்டும். இந்த ஸர்க்கத்தின் முதல் சுலோகமான "ததோ ராவணநீ தாயாஹ சீதாயாஹ சத்ரு கர்ஷணஹ" என்பதை ஒருவன் கேட்ட மாத்திரத்திலேயே கார்ய சித்தி பெறுகிறான் எனக் கூறப்படுகிறது.

புத்திக்குறைவு நீங்க வேண்டுமானால் ஸ்ரீ ஹனுமான் சிந்தை செய்யும் பதின்மூன்றாவது ஸர்க்கத்தைப் படிக்கவேண்டும்.

இப்புவியில் குபேரன் போல் தனவந்தனாகி சந்தோஷம் பெற விரும்புவோன் ஹனுமான் சீதாதேவியைக் கண்டதான சீதா தர்ஸனம் என்ற பதினைந்தாவது ஸர்க்கத்தைப் படிக்க வேண்டும்.

ஆபத்து நீங்க ஸ்ரீ ஹனுமான் சீதா பிராட்டியிடம் கணையாழி கொடுப்பதான முப்பத்தியேழாவது ஸர்க்கம் (அங்குலீயப் பிரதானம்) படிக்க வேண்டும்.

வீடு, தோப்பு, துரவு ஆகியவை விருத்தியடைய லங்கா தகனம் என்ற ஐம்பத்தி நான்காவது ஸர்க்கத்தைப் படித்தல் வேண்டும்.

ஆசைகளை விட்ட ஒருவனுக்கு உலகில் உள்ளயாவும் பிரம்மமயம் என்ற அறிவும், சம்சாரத்தில் லயிக்காத புத்தியும் உண்டாக தபஸ்வினீ வர்ணனம் என்ற சீதாவர்ணன ஸர்க்கத்தை (பத்தொன்பதாவது)ப் படித்தல் வேண்டும்.

சுருக்கமாகச் சொன்னால் ஒருவன் சுந்தர காண்டத்தைப் படிப்பதால் அடைய முடியாதது எதுவும் இல்லை.

"மானஸம் வாசிகம் பாபம் கர்மனா
சமுபார்ஜிதம்
ஸ்ரீராம ஸ்மரணேனைவா வ்யபோ
ஹதி ந சம்சயஹ"

என்பதாலும்,

"நாடிய பொருள் கைகூடும் ஞானமும்
புகழும் உண்டாகும்
வீடியல் வழியை ஆக்கும் வேரியங்
கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய
வாகை
சூடிய சிலை ஸ்ரீ ராமர் தோள் வலி
கூறுவோர்க்கே"

என்பதாலும்,

இயந்திரகதியாகிப் போய்விட்டது வாழ்க்கை என அலுத்துக் கொள்பவர்களும், கவலைகளும், கஷ்டங்களும் அதிகமாகி வருகின்றன வாழ்க்கையில் என நொந்து கொள்பவர்களும் ஸ்ரீ ராகவனுக்குகந்த தாமரை மலர்களாலும் துளசியாலும் அவனை அர்ச்சித்தும் அவன் புகழ்பாடியும் சுந்தரகாண்ட பாராயணம் செய்தும் இகபர சுகம் அடையலாம் அன்றோ!



# இராமானுச நூற்றந்தாதியின் பெருமை



ஆசார்ய ச்ரேஷ்டரான இராமானுசன் விஷயமாக அமுதவாக்கால் திருவரங்கத்தமுதனார் என்ற அவரது ப்ரசிஷ்யர் அருளியது 'இராமானுச நூற்றந்தாதி' என்னும் அழகிய நூல்.

ஆழ்வார்கள் பன்னிருவர் என்று கணக்கிடப் பெறுகிறார்களன்றோ அப்பன்னிருவரது பிரபந்தங்களையும் நன்கு அறிந்து ஆழ்ந்து அனுபவித்தவர் இராமானுசன் என்பது இந்த நூற்றந்தாதியால் நன்றாக விளங்குகிறது. திவ்யப் பிரபந்தம் தோன்றியிராவிடில் ஸ்ரீ வைஷ்ணவ சமயமும் கிடையாது, ஸ்ரீ விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமும் கிடையாது. ஆழ்வார்களது ஆழ்ந்த பகதனுபவத்தை அவர்களது அருளிச் செயல்கள் மூலம் கற்றறிந்துதான் இராமானுசன் ஸ்ரீ பாஷ்யம் இயற்ற வல்லவரானார் என்று ஆசார்யர்களெல்லாரும் அறுதியிட்டிருக்கிறார்கள். இராமானுசனது அருளிச் செயல் பரிசயத்தை இந்நூற்றந்தாதியில் காண்பதுபோல் வேறெங்கும் காண இயலாது. ஆதலால்தான் இந்த இராமானுச நூற்றந்தாதி திவ்யப் பிரபந்தத்தில் ஒரு பகுதியாகவே கருதப்பட்டு வருகிறது. தொன்றுதொட்டு இந்த 108 பாசுரங்களும் சேர்ந்துதான் பாசுர மொத்தம் நாலாயிரம் என்று கணக்காகிறது. இந்தக் கணக்கில் இசை யாதாரும் கூட திவ்யப்பிரபந்தங்களோடொக்க இப்பிரபந்தத்துக்கும் பெருமையுண்டு என்பதை ஒப்புக்கொள்கிறார்கள். எம்பெருமானைப் பற்றிப் பாடாது நம்மாழ்வாரைப் பற்றியே பெருமைபடுத்திப் பாடும் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்கிற மதுரகவியாழ்வார் பிரபந்தம் போல், இராமானுசனைப் பற்றியே புகழ்ந்து பாடும் இந்நூற்றந்தாதியும் திவ்யப்பிரபந்தத்தின் ஒரு பகுதியாகவே கருதப்பட்டு வருகிறது. முதலாயிரத்தின் இறுதியில் திகழும், "கண்ணிநுண் சிறுத்தாம்பு" போல் கடைசி ஆயிரமான இயற்பாவின் இறுதியில் திகழ்ந்து வருகிறது இந்த நூற்றந்தாதி. இது 108 பாசுரங்கள் கொண்டது. ஒவ்வொரு பாசுரத்திலும் 'இராமானுசன்' என்னும் சொல் விளங்குகிறது. இந்த நூலை ஒரு தரம் அனுசந்தித்தால் 108 தடவை இராமானுசன் திருநாமம் உச்சரிக்கப்பட்டதாகும். அது கொண்டு இந்நூல் 'ப்ரபன்ன காயத்ரீ' யென்று போற்றப்படுகிறது. அந்தணர்கள் தினம் 108 தடவை காயத்ரி ஜபம் செய்து நன்மை பெறுவது போல் ப்ரபன்னர்கள் இந்தப் பிரபந்தத்தைப் பாராயணம் செய்து 108 தடவை அவ்வாசார்யோத்தமன் திருநாமத்தை ஜபித்ததனால் ஏற்படும் பயன்களை எய்தி வருகின்றார்கள்.

இந்நூலுக்கு வெகு சுருக்கமாகவும் அழகாகவும் மணவாள மாமுனிகள் ஒரு பதவுரை அருளிச் செய்திருக்கிறார். "யதீந்த்ர ப்ரவணர்" என்ற விசேஷப் பெயர் பெற்றவராயிற்றே அவ்வாசாரியர்! அவரது உரையைப் பின்பற்றிப் பிள்ளை லோகார்யஜீயர் ஒரு விஸ்தார வ்யாக்கியானம் அருளிச் செய்திருக்கிறார். பிற்காலத்தில் பல வ்யாக்யானங்கள் வெளி வந்திருக்கின்றன. சமீப காலத்தில் இந்த நூற்றெட்டு பாசுரங்களையும் நாம்

திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார்,
சென்னை-7.

றெட்டு ச்லோகங்களாக வடமொழி வடிவில் ஒரு பிரஸித்த ஆசார்யர் (ஸ்ரீமதுபயவே கோழியாலம் ஸ்ரீ சப்தம், வங்கீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி) தந்துதவியிருக்கிறார்.

வக்த்ரு வைலக்ஷண்யம் (ஆக்கியோன் பெருமை) விஷய வைலக்ஷண்யம் (போற்றப்படுபவரின் பெருமை) பிரபந்த வைலக்ஷண்யம் (நூலின் பெருமை) என்ற முறையில் ஆராய்ந்து பார்த்தால் இந்த இராமானுச நூற்றந்தாதி எல்லா அம்சங்களிலும் தனிச் சிறப்புடையதாகவே காணப்படும். நிற்க. இந்நூல் இராமானுசரது காலத்திலேயே இயற்றப்பட்டு, அவர் திருவடிகளில் சமர்ப்பிக்கப்பட்டு அவரால் கடாக்ஷிக்கப் (பார்வையிடப்)பட்டு, அவரது ஸம்மதம் பெற்றது என்ற விசேஷப் பெருமையுடையது. ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் பாடப்பெற்ற நூல் என்பது 15 பாசுரங்களில் ஸ்ரீ ரங்கநாதன் இடம் பெற்றிருப்பதிலிருந்தே ஊகித்தறியக் கிடக்கிறது.

எட்டாம் பாசுரத்திலிருந்து பத்தொன்பதாம் பாசுரம் வரை முறையே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருப்பாணாழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார் ஆகிய இவர்கள் போற்றப்படுகிறார்கள். முதல் பாசுரமும், வேறு பல பாசுரங்களும் நம்மாழ்வாருடையவும், அவர் பாடிய திருவாய்மொழியினுடையவும் பெருமையைப் பாராட்டுகின்றன. திருமங்கையாழ்வார் மூன்று பாசுரங்களில் இடம் பெற்றிருக்கிறார், (2, 17, 88). திவ்யப் பிரபந்தத்தின் பெருமையைக் கண்டுபிடித்து, அது மறைந்திருந்தபோது அரும்பாடுபட்டு, அதை மீட்டு நமக்குத் தந்த நாதமுனிகளும், ஆழ்வார்களது அனுபவங்களை உள்ளடக்கி வடமொழியில் முதல் முதலாக ஸ்தோத்திரம் அமைத்த அவரது பேரன் ஆளவந்தாரும் இந்நூலில் பாராட்டப் பெறுகிறார்கள் (20, 21). இப்படியாக இந்நூற்றந்தாதி அருளிச் செயலின் ஸாரம் என்று கொண்டாடத் தகுந்தது.

"மூவர் நெருக்கி மொழி விளக்கேற்றி முகுந்தனைத் தொழுதமை" 8, 9, 10 பாசுரங்களில் காணப்படுகிறது. "வருத்தும் புறவிருளும்" 'இதயத் திருளும்' முறையே மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்தன்று (பொய்கையார்) எரித்த திருவிளக்காலும் பூதத்தாழ்வார் ஏற்றிய ஞானமென்னும் நிறைவிளக்காலும் அகல, கோவலுள் மாமலராள் தன்னோடு மாயனைக் கண்டமை காட்டியருளினார் தமிழ்த் தலைவராம் பேயாழ்வார். என்ன பொருத்தமான வர்ணனை! என்ன ரஸமான சொற்கள்! மறையின் குருத்தின்(உபநிடத்தின்)பொருளைச் செந்தமிழோடு கூட்டி ஒன்றைத் திரித்தபோதுதான் உபய வேதாந்தம் உலகில் உதித்தது. விளக்கேற்றி அம்மூவர் கண்ட வேத விழுப்பொருளைப் பற்றி அவர்கள் பேசினார்கள், பாடினார்கள் என்று அமுதனார் பாடவில்லை. 'கண்டமை காட்டும்' என்று அழகுபடப் பேசிப் போகிறார். திவ்யப் பிரபந்தம் திருமாலைப் பற்றிப் பேசுகிறதில்லை, திருமாலைக் காட்டிக் கொடுக்கிறது. காட்டுவதற்கு வல்லவரானது, அவர் தமிழ்த் தலைவன் ஆதல்பற்றி. தமிழுக்கு உண்டான தனிப்பெருமையிது. அதோடு கூட மாமலராள் தன்னோடு மாயனைக்கண்டமைகாட்டவல்லவர், ஒரு தமிழ்த் தலைவராகவேயிருத்தல் வேண்டும். வெறும் நாராயணனைக் காட்ட எல்லாச் சொற்களுக்கும் சக்தியுண்டு. திருவோடு சேர்த்து அவனைத் திருமாலாகக் காட்டும் சக்தி தமிழுக்கே தனிப்பட்ட ஏற்றம். திவ்யப் பிரபந்தத்தின் தோற்றுவாய் திருவும் மாலும் சேர்ந்த சேர்த்தியில் தானே! இந்தப் பெருமையை உணர்ந்துதானே கம்பன் 'தென் திசை சேறி என்றான், அவனருள் சிதைவதாமோ?' என்று திருவடியைப் பேச வைக்கிறான். பெருமாள் (இராமன்) திருவடியை (ஹனுமானை)த் தனியாக அழைத்து ரகசியமாக 'ஸீதையைத் தேடத் தெற்குத் திக்கை நாடிப் போ!' என்று சொன்னாராம். தென்மொழியைத் தென்திசையென்று குறிப்பாகக் காட்டிப் போந்தார் பெருமாள். (இந்த ரகசியம் வால்மீகியாலேயே ஸூசனையாக உணர்த்தப் பட்டது. 'தக்ஷிணா திக் அநுக்ராந்தாத்வந் மார்க்கவிசயைஷிணா' என்று)

இப்படிப் பல அரிய அநுபவங்கள் இராமானுச நூற்றந்தாதியில் நிரம்பியுள்ளன. தமிழுக்கு எத்துணை பெருமை கொடுக்கப்பட்டிருக்கிறது இந்நூலில்! செந்தமிழ் என்று (8, 11, 13, 19) பல பாசுரங்களிலும், தண்டமிழ் (17), இன்தமிழ் (18), ஈரத் தமிழ் (20), வண்தமிழ் (54), பசுந்தமிழ் (29,64) என்று பாடித் தமிழையும் தமிழ்க் கவிகளுள் தலை சிறந்தவர்களான ஆழ்வார்களையும், அவர்கள் மகிழ்ந்து பாடிய செய்ய தமிழ் மாலைகளையும் பாராட்டும் இப்படிப்பட்ட நூலை வேறு எங்குக் காண முடியும்? கம்பன் சடகோபனது (நம்மாழ்வாரது) பாசுரங்களை மட்டும் பாராட்டினான். ஆழ்வார்கள் அனைவரது பெருமையையும் ஒருங்கே காண்பது அமுதனாரது அமுதவாக்கில் தான். திருவாய்மொழிக்கு இசையுண்டு என்று எல்லோரும் இசைந்துள்ளார்கள். ஆனால், நறுமணமுண்டு என்று அமுதனார்தான் முதலாகப் பாடினார்-திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை(60). என்ன மணம் என்பதை விவரிக்கிறார் நிகமாந்த மஹாதேசிகன்: 'வகுளாமோத வாஸிதம்' மகிழம்பூ மணம் வீசும் அரும்பெரும் நூல்.

பொருட்சுவை இவ்வளவு மேம்பாடுடையதாயிருக்கச் செய்தே சொற்சுவையும் யாப்பமைப்பும் இன்னும் அதிகமான அழகு பொருந்தி

விளங்குகின்றன இந்நூற்றந்தாதியில். திவ்யப் பிரபந்தத்துள் 24 பிரபந்தங்கள் உள. அவற்றுள் நம்மாழ்வார் பாடிய திருவிருத்தமும் அமுதனார் பாடிய நூற்றந்தாதியும்தாம் கட்டளைக் கலித்துறையில் அமைக்கப்பட்ட பிரபந்தங்கள். அவ்விரண்டுமே மிக இனிய நூல்கள். அவற்றுள்ளும் பெருமாளைப் பாராட்டும் திருவிருத்தத்திற் காட்டில் ஆழ்வார் ஆசார்யர்களைப் போற்றும் நூற்றந்தாதி பூர்வர்களுடைய உள்ளத்தை வெகுவாகக் கொள்ளை கொண்டதெனத் தெரிகிறது. எம்பெருமானைக் காட்டிலும் நம்மிடம் பெருங்கருணை கொண்டவர் எம்பெருமானார். ஆகவே எம்பெருமானாரைப் பாராட்டும் நூல் எம்பெருமானைப் பாராட்டும் நூலிலும் சிறந்து விளங்குவது இயல்புதானே!

இராமானுச நூற்றந்தாதி திவ்யப் பிரபந்தத்தின் ஸாரம். ஆழ்வார்கள் எப்படி எப்படியெல்லாம் பெருமாளை அனுபவித்தார்களோ, அப்படி அப்படியெல்லாம் அமுதனார் எம்பெருமானாரை அனுபவிக்கிறார் இந்நூற்றந்தாதியில். நம்மாழ்வாருடைய 'பயிலும் சுடரொளி', 'நெடுமாற்கடிமை', திருவாய்மொழிகளிலும், குலசேகரப் பெருமாளது 'தேட்டருந்திறல்' திருமொழியிலும், பெரியாழ்வாரது 'நாவகாரியம்' திருமொழியிலும், திருமங்கை மன்னனுடைய 'கண் சோர' திருமொழியிலும் விசேஷித்துக் காணப்படும் பாகவதர்கள் பெருமையும், மதுரகவிகள் கண்ணிநுண் சிறுத்தாம்பில் தோன்றக் காட்டிய ஆசார்யன் பெருமையும் ஒருங்கே மிளிர்வது நூற்றந்தாதியில்.

ஆழ்வார்களது அருளிச் செயலில் எத்துணை பிரவேசம் எம்பெருமானாருக்கிருந்தது என்பதை அவ்வாசார்யருடைய ஒரு முக்கியமான கொள்கையில் காணலாம். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களுள் இன்பம் எனப்படும் காம புருஷார்த்தமே முக்கியம் என்று யதிகட்கிறைவனான இராமானுசன் ஸித்தாந்தம் (40-ம் பாசுரம் நோக்குக) என்பது அமுதனார் காட்டித் தந்த ரகசியம். உலகப் பொருட்களைத் திருணமாக மதித்த அவ்வாசார்யர் எம்பெருமானிடத்து ஆசை மிகுந்து விளங்கினார். இந்த உண்மை அவர் எங்கிருந்து கண்டு கொண்டார்? ஆழ்வார்களிடமிருந்து தான். 'அன்பிலன்றி ஆழியானை யாவர் காண வல்லரே' திருமழிசையாழ்வார் உபதேசம் இது. அதனில் (பரம்பொருளில்) பெரிய அவாக் கொண்டவர் நம்மாழ்வார். 'திருமால் (மிகுந்த ஆசை) தலைக்கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே' என்று பாடி பகவத்காமமே பாபத்தை அணுகவொட்டாது செய்து பரமானந்தத்தைப் பெறுவிக்கும் என்று பாடிப் போந்தவரும் நம்மாழ்வார் தான். ஆழ்வார்களை 'மாலுகந்த ஆசிரியர்' என்றே வேதாந்த தேசிகன் புகழ்ந்து பேசுவர். 'மாசில் மனந்தெளி முனிவர் வகுத்தவெல்லாம் மாலுகந்த ஆசிரியர் வார்த்தைக் கொவ்வா' என்பது அவர் பாரோனறச் சொன்ன பழமொழிகளுள் ஒன்று.

இராமானுச நூற்றந்தாதியின் அளவற்ற பெருமையை எண்ணி ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அந்தப் பிரபந்தத்தைப் 'பிழையறக்கற்று அடியேன் இன்புற அருள் செய்ய வேண்டு'மென்று, அதை ஆக்கித் தந்த அமுதனாரைவிட்டு அதற்கு விஷயமான இராமானுசனையே வேண்டுகிறார்.

"தேச மெலா முகந்திடவே பெரும்
பூதூரில்
சித்திரையிலாதிரை நாள் வந்து
தோன்றி
காசினி மேல் வாதியரைவென்று
அரங்கர்
கதியாக வாழ்ந்தருளும் எதிராசா!
முன்
பூசுரர் கோன் திருவரங்கத்தமுதனார்
உன்
பொன் னடிமேல் அந்தாதியாகப்
போற்றிப்
பேசிய நற்கலித்துறை நூற்றெட்டுப்
பாட்டும்
பிழையறவே எனக்கருள் செய்
பேணி நீயே".

'பிரபந்த சாரம்' என்னும் அரிய பிரபந்தத்தில் (இது தேசிகப் பிரபந்



திருமலையில் வசந்தோத்ஸவம்

தத்தில் ஒன்று) பன்னிருவர்களான ஆழ்வார்கள் ஒவ்வொரு வரையும் குறித்து ஒரு பாசுரமருளிச் செய்து, அதில் அவர் அருளிச்செய்த பிரபந்தத்தையோ பிரபந்தங்களையோ தமக்கு அனுக்கிரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துப் போந்தவர், இந்த இராமானுச நூற்றந்தாதிப் பிரபந்தத்துக்குப் பாசுரமிடும்போது மட்டும், அதை அருளிச் செய்த அமுதனாரை விளித்து 'இந் நூலை அடியேன் கற்றுய்ய அருள் செய்ய வேண்டும்' என்று பிரார்த்திக் காமல், அந்நூலால் பாராட்டப்பட்ட இராமானுசனையே விளித்து இப்பிரபந்தத்தைப் பிழையற அடியேனுக்கு அருள வேண்டும் என்று பாசுரம் அமைத்திருப்பது உய்த்துணரற் பாலது.

இதன் ரகசியம் பிரபந்த சாரத்தின் 17-ம் பாசுரத்தில் வெளியாகிறது. ஆழ்வார்கள் பன்னிருவரோடு இவ்வாசார்யோத்தமனையும் சேர்த்து "அவர் தாம் செய்த" என்று பாடிய விடந்து மேலாகப் பார்த்தால், மற்ற ஆழ்வார்கள் அவரவர் நூல்களைப் பாடியது போல் இவர் நூற்றந்தாதியைப் பாடினார் என்று பொருள்படும்படி சொற்களமைந்திருக்கின்றன. ஆனால், நுண்ணறிவுடையோர் இவர் விஷயத்தில் 'செய்த' என்னும் சொல் 'செய்வித்த' என்னும் பொருளில் கையாளப் பட்டிருக்கிறது என்பதை அறிவர். (ஒரு பெரிய தனவான் ஒரு பெரிய மாளிகையை ஒரு மாதத்தில் கட்டி முடித்தார் என்றால், அவரே முழுவதும் தமது கையினால் கட்டினார் என்று எவராவது பொருள் கொள்வார்களா? கட்டுவித்தார் என்றுதான் இலக்கணமறிந்தவர் பொருள் கொள்வார்கள்) இப்படிப் பாடியதற்கு ஒரு காரணம் உண்டு. ஆளவந்தார் சரம திருமேனி முன்னிலையில் 'நம்மாழ்வார் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்யானமியற்றுகிறேன்' என்று பிரதிக்ஞை செய்த எம்பெருமானார் அந்தப் பிரதிக்ஞையைத் தமது சீடரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் மூலம் நிறைவேற்றினார் என்பது எல்லோரும் ஒப்புக்கொண்ட விஷயம். அதே மாதிரி சில முக்கிய காரணங்களால் திவ்யப் பிரபந்தத்தை நேராகத் தாமே புகழ்வதில்லை என்ற ஒரு நியமத்தை மேற்கொண்ட இராமானுசன் திருவரங்கத்தமுதனாரைக் கொண்டு அக்காரியத்தைச் செய்வித்திருக்கிறார் என்பதே தத்துவம். யதிராஜனே மறுபடி உலகில் வேதாந்த தேசிகனாக அவதரித்தருளி இப்படிப் பாடி வைக்காதிருந்தால் இந்த ரகசியத்தை உலகம் எவ்வாறு அறியும்?

தன்னைப்பற்றி ஒரு ஸ்துதியைத் தானே செய்விக்கலாமா என்று சிலருக்குச் சந்தேகம் வரலாம். 'என்னைக்குமென்னை' என்ற திருவாய்மொழியில் அதற்குப் பரிகாரம் காணலாம். 'என் சொல்லால் யான் சொன்ன இன்கவியென்பித்து, தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்' என்று எம்பெருமான் பாராட்டப்படுகிறான். எம்பெருமான் செய்ததைத்தான் எம்பெருமானாரும் செய்தருளினார்.

சொல்லார் தமிழொரு மூன்றும், சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் அறிந்தவர் இராமானுசன். அவர் விஷயமாக அவதரித்த நூற்றந்தாதியும் திவ்யப் பிரபந்த சாரம் என்று இப்புடைகளால் அறியக் கிடக்கிறது.

நன்றி: ஸ்ரீ வைஷ்ணவ ஸதாசார ஸங்க்ரஹம்—லிப்கோ.



## பிரம்ம ரிஷிகள்

மரீசி, அங்கிரர், அத்ரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் ஆகிய ஏழுவரும் பிரம்ம ரிஷிகளாவர்.

## ஸப்த ரிஷிகள்

கச்யபர், அத்ரி, பரத்வாஜர், விச்வாமித்ரர், கோதமர், ஜமதக்னி, வஸிஷ்டர் ஆகிய எழுவரும் ஸப்த ரிஷிகளாவர்.

## திசைகளைத் தாங்கும் பாம்புகள்

எட்டுத் திசைகளையும் எட்டுப் பாம்புகள் தாங்குகின்றன. அவை :- வாசுகி, அநந்தன், தட்சன், கார்க்கோடகன், பதுமன், மகா பதுமன், சங்கபாலன் மற்றும் குளிகன் என்பன.

## யாகம் செய்பவர் எப்படி இருக்க வேண்டும்?

யாகம் செய்பவர் மான் தோலை அணிந்திருக்க வேண்டும்.

அத்தி மரத்தண்டை கையிலேந்தியிருக்கவேண்டும்.

இடையில் தர்ப்பையிலான மேகலை அணிந்திருக்க வேண்டும்.

நகத்தினால் மேனியை சொரிந்து கொள்ளக்கூடாது. அதனால் மான் கொம்பை வைத்திருந்து அதனால் சொரிந்துகொள்ள வேண்டும்.

யாகத்திற்காக தீக்ஷை கொண்டுள்ள யஜமானரிடம் சிவபிரான் உறைவதாக சாஸ்திரங்கள் கூறுகின்றன.

தகவல் :- க. இராமலிங்கம்
புதுப்பேட்டை.

# சிம்ஹாசலம

திரு. எல். லக்ஷ்மநரசய்யமின்
விஜயவாடா.

வைணவர்கள் எம்பெருமான் அவதரித்த க்ஷேத்திரங்களை, முக்கியமாக, ஆழ்வார்கள் ஆசார்யர்கள் மங்களா சாஸனம் செய்த க்ஷேத்திரங்களை 108 திவ்ய தேசமாகவும், புராண வரலாறு அதாவது புராணங்களால் போற்றப்பட்டுள்ள திவ்ய தேசங்களை 20 திவ்ய தேசங்களாகவும், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் அபிமானித்த க்ஷேத்திரங்களை 29 திவ்ய தேசங்களாகவும் போற்றிப் புகழ்ந்து வருகிறார்கள் என்பது தொன்று தொட்டு வரும் அனுபவமாகும்.

இவ்வாறு போற்றி வரும் புராண வரலாறு பெற்ற திவ்ய தேசம் 'சிம்ஹாசலம்' என்கிற அழகிய க்ஷேத்திரமாகும்.

ஆசாரியர்கள் ஆழ்வார்கள் மங்களா சாஸனம் செய்த திவ்யதேசமா இருப்பினும், புராண வரலாறு பெற்ற ஸ்தலமாக இருப்பினும் அல்லது அபிமான ஸ்தலமாக இருப்பினும், 'ஸ்ரீ நரசிம்ம க்ஷேத்திரம்' என்றால் அதற்கு நமது முன்னோர்கள் முதல் இந்நாள் வரையும் ஒரு தனிப்பட்ட முக்கியத்வம் அளித்து வருகிறோம் என்பதுகண்கூடான அத்தாக்ஷியாகும் எனக் கூறினால் அது மிகையாகாது.

இதையே காளிதாஸன், 'போஜம்பு' என்னும் நூலில் போற்றுவதைக் காண்போம்:

"ப்ரஹ்லாதஸ்ய வ்யஸனமமிதம்
தைத்யவர்கஸ்ய தம்பம்,
ஸதம்பம் வக்ஷஸ்தலமபிரி யோ
யௌக:பத்யேன பேத்தும்,
பக்தச்ரத்தம் புருஷவபுஷா மிச்ரிதே
விச்வரேஷ்டே,
தம்ஷ்டராரோசிர் விசிதபுவனரம்
ஹஸா ஸிம்ஹவேஷா."

மேலும் நம்மாழ்வாரும் இந்த அவதாரத்தைப்பற்றிக் கூறுவதை இங்குக் காண்போம்:

"'எங்கும் உளன் கண்ணன்' என்ற
மகனைக் காய்ந்து
இங்கில்லையால் என்றிரணியன் தூண்
புடைப்ப,
அங்கப் பொழுதே அவன் வியத்
தோன்றிய என்
சிங்கப்பிரான் பெருமை யாராயும்
சீர்மைத்தே?"

இந்த திவ்ய க்ஷேத்திரம் ஆந்திராவில் வால்டேர் ஸ்டேஷனில் (விசாகப்பட்டினம்) இருந்து 5 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. அஃது பலவித புஷ்ப தோட்டங்கள், பழத்தோட்டங்களும், தெள்ளத் தெளிய ஓடும் அருவிகளும் கூடிய அழகான பிரதேசம். மேலும் பஸ் வசதிகளும், தங்கும் வசதிகளும் கொண்டுள்ளது.

இங்கு வீற்று இருக்கும் பெருமானின் திருநாமம் 'வராக நரசிம்மர்'. பிரக்கலாதனைக்காப்பாற்ற நரசிங்க ரூபமாகத் தோன்றி, குழந்தை பிரஹலாதனின் வேண்டுகோளுக்கு இணங்க வராக நரசிம்ம ரூபமாக சேவை சாதித்தார் என்பது புராண வரலாறு.



திருமலை வழிச்சாலையில் ஸ்ரீ லக்ஷ்மிநரசிம்மசுவாமி கோயிலின் மூலஸ்தானம்

லாக சிலவற்றை அறிவோம்:

அதாவது 'ஜய - விஜய' என்கிற துவார பாலகர்கள், மஹரிஷிகளின் சாபத்தால், பூலோகத்தில் ராக்ஷஸர்களாக அதாவது ஹிரண்யாக்ஷனாகவும், ஹிரண்யகசிபு ஆகவும் தோன்றினார்கள். ஹிரண்ய கசிபுவை, விஷ்ணு வராக ரூபம் எடுத்து சம்ஹாரம் செய்தார். அது கேட்ட ஹிரண்யாக்ஷன் விஷ்ணுவை தூஷித்தும், விஷ்ணு பக்தர்களையும், மஹரிஷிகளையும் துன்புறுத்தியும் வந்தான். இவ்வாறு இருக்க, விஷ்ணு, ஹிரண்யாக்ஷனை அழிக்க எண்ணி, 'சுமுகா' என்ற தேவனை அவனுக்குக் குமாரனாக அவதரிக்கச் செய்தார். அவன்தான் 'பிரகலாதன்'. குழந்தைப் பருவத்தில் இருந்தே விஷ்ணு பக்தனாக இருப்பதைப் பார்த்து தந்தை அவனைப் பலவிதமாக ஹிம்ஸித்து, அவனை மலைமேல் இருந்து கடலில் தள்ளிவிடும்படி ஆணையிட்டான். அப்பொழுது சிம்ம ரூபமாக விஷ்ணு மேற்படி மலையில் தோன்றி, பிரகலாதனைக் காப்பாற்றினார் என்பது வரலாறு. மலையில் சிங்க ரூபமாக விஷ்ணு தோன்றியதால் ...படி மலைக்கு சிம்ஹாசலம் ...பெயரும் ஏற்பட்டது.

சாதித்து உள்ளார்கள். பார்ப்பதற்குத் தூண் போல் காட்சி அளிக்கிறார். இந்தச்சந்தனக்காப்பின் உட்பொருள் யாது என அறியக்கேட்டதில், வராகமும், நரசிம்ம ரூபமும் சேர்ந்து உருவ அமைப்பு மிகவும் உக்கிரமாக இருப்பதால், சந்தனக் காப்பு செய்து சேவிக்க வேணும் என ஆகாச வாணியின் ஆணையின்படி நடந்து வருவதாக ஐதீகம் எனக் கூறக்கேட்கிறோம்.

மேற்படி சந்தனக்காப்பை, வைசாக மாஸ (அக்ஷயதிருதீயை) த்தில்மட்டும் களைந்து நிஜஸ்வ ரூபதரிசனம் அது போது வருகிறது. இதையே நடந்து "சந்தனயாத்ரா" எனச் சொல்கிறார்கள். இவ்விழாவுக்குஆயிரக்கணக்கான பக்தர்கள் வந்து சேவித்துச் செல்கிறார்கள்.

இங்குத் தனியாக தாயார் சந்நிதி கிடையாது. லக்ஷ்மி பெருமாளின் மார்பிலேயே இருப்பதாக ஐதீகம்.

கல்யாண உற்சவம், நரசிம்ம ஜயந்தி விழாக்கள் சிறப்பாக நடந்து வருவதாக அறிகிறோம்.

இங்கு நரசிம்ம தீர்த்தம், கங்க தாரா என்ற அருவிகள் ஆண்டு முழுதும் வற்றாமல் ஓடுகிறது. இது சகல பாவங்களையும், பிணிகளையும் போக்கும் சக்தி வாய்ந்தது எனக் கூறுகிறார்கள்.

கும், ஸநக ஸனந்தன ஸனத்குமாரர்களுக்கும், நாரதாதி ரிஷிகளுக்கும், யோகிகளுக்கும் ப்ரத்யக்ஷமாக சேவை சாதித்தார் என்றும் நூல் கூறுகிறது.

குழந்தை பிரகலாதனை, கடலில் விழாமல் காப்பாற்றியும், அவனுடைய பக்திக்கு கட்டுண்டு வராக-நரசிம்மராக சேவை சாதித்தும், அனுதினம் வரும் பக்தர்களுக்கு அபயம் அளித்து வரும் வர பிரசாத பெருமாளே வராக - நரசிம்மர் என்றால் அது மிகையாகாது.

இத்திருத்தலத்தில் இனவேறுபாடு, மொழி வேறுபாடு எதுவும் இல்லாமல், அனுதினமும் வந்து வழிபடும் பக்தர்களைக் காணக் கோடி கண் வேண்டும்.

இத்துணை மஹாத்மியம் பெற்றுள்ள க்ஷேத்திரத்தை பக்த கோடிகள் ஒரு முறை சேவித்தால், செய்த பாபம், பனி போல் மறைந்து, இம்மைக்கும் மறுமைக்கும், அவனுடைய பரிபூர்ண கடாக்ஷத்துக்கு பாத்திரம் ஆகிறார்கள் என்பது நம் முன்னோர்கள் கண் கண்ட உண்மையாகும்.

'' ஸர்வாரிஷ்ட விநாசாய ஸர்வேஷ்ட
பலதாயினே,
சிம்ஹாசல நிவாஸாய ஸ்ரீந்ருஸிம்
மாய மங்களம்''

எனப் போற்றிப் புகழ்வோமாக.



# குருவாயூர் சித்திரை விஷு



**முன்னுரை :**

இக்கலியுகத்தைக் கொடியதாகப் பெரியோர்கள் கூறுவதுண்டு. ஆனால், "கலி:ஸாது"—கலியுகம் ஒரு நல்ல யுகம் என ஒரு பழைய நூல் கூறிற்று. ஆம்! ஒரு புடையில் அதுவும் மிக உண்மையே!

கிருதயுகம் முதலிய முந்திய யுகங்களில் கடவுளின் திருவருளை எளிதில் பெற முடியாது. உடலை வறுத்தி உண்ணாமல் பெருந்தவம் செய்தே அவ்வருளைப் பெற வேண்டும். ஆனால், இக்கலியுகத்திலோ—எவ்வாறாயினும் அவன் திருப்பெயரைச் சொல்லி வழிபட்டால் அவன் அருளை எளிதில் பெறலாம். ஏன் அவனுடன் உரையாடியும் மகிழலாம் கூடதே!

வேதமும், அவன் திருப்பெயரைக் கூறி உய்வதன்றி வேறு வழியில்லை என்பதை—"நாமானி க்ருத்வா அபி வதந் யதாஸ்தே நாந்ய: பந்தா அயனாய வித்யதே:" என்றது. புராண நூல்களும் "கலௌ ஸங்கீர்த்ய கேசவம்" என்றது. திருமாலையும் "நின் நாமம் கற்ற ஆவலிப் புடைமை கண்டாய்" என்றருளியது. இதன் பெருமையை நன்கு உணர்ந்தவர் 'சௌனகர்' என்ற மாமுனிவர்.

இவ்வளவு ஏன்? இன்றும் நாம சங்கீர்த்தனத்தினால் பேசாத கடவுள் பேசுவதும், காண்டற்கரிய கடவுள் நம் கண்முன் உலாவுவதுமாகிய இவை நடப்பதை தென்னாட்டில் சில ஆலயங்களில் இன்றும் காணலாம். இல்லாவிடில் அந்தந்த ஆலயங்களில் பக்தர்களின் கூட்டமும், துன்புற்றுத் துடிப்போர் திரளும் புகல் நாடித் திரள்திரளாக வருவார்களா?

"நம் முயற்சியினால் எதையும் சாதிக்கலாம்" என்று எண்ணுபவர்கள்கூட, இயலாத முடிவில், மறைமுகமாகவாவது அந்தந்த ஈசன் கோயிலில் வேண்டி நலம் பெறுவதைக் காண்கிறோம். அத்தகைய கடவுள்களில் கண்கண்ட தெய்வமாய் அருள் பாலிப்பவனே நம் "குருவாயூரப்பன்".

---

**'சன்னிஷ்டை'**

---

அப்பன் என்றால் அழுத பிள்ளையும் அமைதியுறும். "குருவாயூர் அப்பனே அப்பன்" என்றும், "நாராயணா" என்றும், "கிருஷ்ணா" என்றும் குருவாயூரப்பன் முன்னிலையில் உள்ளம் உருகிக் கண்ணீர் வடித்துக் கதறும் மக்களை இன்றும் சந்நிதானத்தில் காணலாம். அவனே பக்தர்களின் பங்காளன்—அடியார்களின் அரும் தெய்வம்; வேண்டி நின்றால் தாண்டி வருவான். அத்தகைய கலியுகக் கண்கண்ட தெய்வமான குருவாயூரப்பன் மகிமையை இக்கட்டுரையில் ஒரு முறை படித்து இன்பம் பெறலாம்.

**கண்ணன்:**

ஸ்ரீ குருவாயூரப்பனைக் கண்ணன் என்றும், கிருஷ்ணன் என்றும், நாராயணன் என்றும், ஸ்ரீ வித்யா ராஜ கோபாலன் என்றும் அழைக்கிறார்கள் மக்கள்.

கண்ணன் என்னும் கருந்தெய்வம் திருமால் அவதாரங்களில் கடைசியானதும், நமக்கு அருகில் நடந்த

றுய, முலையயாக பூரணமான அவ தாரப் பெருமையும் எளிமையும் கலந் தது. கிருஷ்ணன் என்ற சொல்லுக்கு இம்மையிலும் மறுமையிலும் நிம்மதி யைத் தருபவன்; கறுப்பு நிறமுள்ள வன், மனத்தைக் கவருபவன் என் றெல்லாம் பொருள்.

கண்ணன் என்ற சொல்லுக்கு நம் வாழ்விற்குக் கண் போன்றவன், கண் போல் தம் இருப்பைக் காட்டாமல் ஒளி தந்து வழி காட்டுபவன். "உள் ளத்துக்குக் கண் ஜன்னல் என்பதற் கிணங்க நம் எண்ணத்தைப் பிரதி பலிப்பவன்" என்றும், 'கண்' என்பது ஏழாம் வேற்றுமை உருபாக, அதன் பொருளான "தாங்குதல்" என்ற பொருள் கொண்டு நம்மைத் தாங்கு பவன் எனவும், இவன் ஒரு பரம் பொருள் என்பதைக் கோள் சொல் லும் செந்தாமரைக் கண்ணழகு படைத்தவன் என்றெல்லாம் பொருள்

அப்பன் சிறப்பு :

ஸ்ரீ குருவாயூரப்பன் உண்மையில் ஒப்பற்ற ஒரு கருணையம் கடல். ஆம்! ஒரு மகாசமுத்திரம். இவரது



உஷத் கால பூஜையின் கோலம்

பெருமையை—சிறப்பை நாரத புரா ணமும், உட்டாமரேச தந்திரமும் பேசும். இவர் ஸ்ரீ வித்யா மந்திர தேவதையாகவும் உள்ளவர். பார் வதி தேவிக்கு இவரிடம் அளவற்ற பக்தி. இவர் பெருமையை முற்றும் உணர்ந்த சிவபெருமான், பார்வதி தேவிக்கு ஸ்ரீ குருவாயூரப்பன் பெரு மையைக் கூறினார்.

தந்திரத்தில் "இந்திர நீலஸமச் சாயம் பீதாம்பரதரம் ஹரிம்! சங்க சக்ர கதா பத்மை: லஸத் பாஹு ம் விசிந்தயேத்" என்ற செய்யுளை ஒரு தேய் பிறை அஷ்டமியிலிருந்து மறு தேய்பிறை அஷ்டமி வரை ஒரு மாதம் அதிகாலையில், சூரியன் சிறிது உதிக்குமுன எட்டெட்டு முறை ஜபித்து வந்தால் நினைத்தது கை கூடும்—நிறைவேறும் என்று கூறப் பட்டுள்ளது. ஆசார நியம நிஷ்டை யுடன் செய்ய வேண்டும் என்பது குறிப்பு.

இவருக்கு எட்டுக் கைகள உண்டு. "கறுத்த மனம் வேண்டா கண்ணனல் லால் தெய்வமில்லை" என்று நம் மாழ்வார் அருளிச் செய்தபடிக்கு— சங்கு, சக்கரம், பூ, கரும்பு, கோதண் டம், கயிறு, கதை, சூலம் என்ற எட்டு ஆயுதங்களுடன் எட்டுக் கை கள் கொண்டவன் என இவரது அர்ச் சனை மந்திரம் கூறுகிறது. என்றும் அஷ்ட லக்ஷ்மிகளுடன் இருப்பவர். பேய், பிசாசு, காசம், அபஸ்மாரம், குஷ்டம் முதலிய கொடிய நோய் களைப் போக்கி ஐச்வரியம் யாவும் தருபவர் என்றும் பழம் நூல் கூறும்.

பட்டோத்ரி இவரை "ஜனானாம் பாக்யம்" என்றும், "காதுக்கும் மன திற்கும் இனிய தெய்வம்" என்றும் கூறினார். கண்ணன் யமுனையில் செய்த ராஸக்கிரீடை நிகழ்ச்சியைப் படித்தால் இவருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகும் என பட்டோத்ரி "ராஸ விலாஸ விலோலம் ஸ்மாத" எனப் 'ப்ரிக்ரியாஸர்வஸ்வம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.



நிர்மாலய தரிசனம்

குருவாயூர் :

குருவாயூர் எனப் பெயர் வந்த தற்கும், அப்பன் இத்தலத்திற்கு வந்ததற்குமான புராணக் கதை ஒன்று உண்டு. பரீக்ஷித்தின் மைந்தன் ஜனமேஜயன் என்பான் ஸர்ப்பயாகம் செய்து பெரு வியாதி (குஷ்டம்) பெற்றான். பிறகு ஆத்திரேயர் என்ற முனிவரின் அறிவுரையால் குரு வாயூரப்பனை வழிபட்டு அத்தீராத நோய் தீரப்பெற்றான். முன்பு ப்ரு ச்னியும், சுதபஸும் ஆக ஒரு முனித் தம்பதிகள், தங்களுக்குக் குழந்தைப் பேறு வேண்டி பிரம்மாவை வழிபட் டார்கள். அவர் அவர்களுக்குப் 'பத்ம நாபன்' உருவத்தைத் தந்து வழி படச் சொன்னார்.

இமய மலை சென்று அவர்கள் இந்த உருவத்தை வழிபட்டு வர, அப் பரமனும் மகிழ்ந்து அவர்கள் விரும் பிய வரம் என்ன எனக் கேட்டார். பரமன் அழகில் ஈடுபட்ட அவர்கள் "உன்னைப் போல் குழந்தை வேண் டும்" என மூன்று தடவை கேட்டார் கள். அதன் பயனாய் திருமால் முதல் பிறவியில் ப்ருச்னிக்கு மைந் தனாயும், இரண்டாம் பிறவியில் அதிதிக்கு மைந்தனாயும் (வாமனாவ தாரம்), மூன்றாவது பிறவியில்

தேவகி – வஸுதேவருக்குக் கண்ண னாகவும் பிறந்தார்.

அக்கண்ணன் தமது அவதாரச் செயல் முடிக்கும் தருவாயில் துவா ரகை என்ற பட்டிணத்தையும் ஏற் படுத்தினார். அங்கு ஒரு கோயிலை யும் ஏற்படுத்தினார். அக்கோவிலில் தனது அருள் படிமத்தைத் தாமே பிரதிஷ்டை செய்தார். கடைசியாக யதுவம்சமும், துவாரகையும் மறை யும் தருணத்தில் உத்தவர் என்ற பெரும் பக்தரிடம் தன் அருள் வடி வத்தைத் தந்து அதனை நல்ல இடத் தில் பிரதிஷ்டை செய்து வழிபட்டு எல்லா இன்பங்களையும் யாவரும் அடைய வகை செய்ய எண்ணி உத் திரவிட்டார்.

உத்தவரும் கண்ணன் ஆணைப் படிக்கு பிரகஸ்பதியிடம் அவ்வுருவத் தைத் தந்தார். பிரகஸ்பதி துவா ரகைக்கு வந்தார். வரும் வழியில் வாயு (காற்று) தேவனைச் சந்தித் தார். இருவரும் சேர்ந்து துவாரகை சென்றார்கள். அங்குக் கடலில் ஆலிலை மேல் சயனக் கோலத்தில் பச்சிளம் பாலகனாய் மிதந்து கொண் டிருந்த கிருஷ்ணன் திருவுருவைக் கண் டார்கள். சிவபெருமான் உபதேசப் படி இந்த நாராயணனை "மான்மி யூர்" என்று அன்று வழங்கிய இந்தப் பிரதேசத்தில் கொண்டு வந்து பிர திஷ்டை செய்தார்கள்.

இப்படிக் குருவும்—வாயுவும் சேர்ந்து கொண்டு வந்த காரணத் தாலேயே, இந்த க்ஷேத்திரத்திற்குக் "குருவாயூர்" எனப் பெயர் ஏற்பட் டது என்பது புராணம். மற்றும் வாத புரி, மங்கள க்ஷேத்திரம் என்ற பெயர் களும் வழங்குகின்றன. தற்காலத் தில் இப்பிரதேசம் "குருவாயூர்" என அழைக்கப்படுகிறது. இதற்கு ஒரு மைல் தொலைவில் 'மான்மியூர்' என்ற சிவக்ஷேத்திரம் உள்ளது. இங்கு சிவபெருமான் தம் பரிவாரங்களுடன் கோயில் கொண்டுள்ளார். இச்சிவ பெருமானை குருவும்—வாயுவும் பூஜித்து வழிபட்டார்கள் என்பது வரலாறு. அதனால் குருவாயூர் சென்று வரும் பக்தர்கள்—அப் பனைத் தரிசித்த பின் இக்கோயிலுக் கும் சென்று சிவபிரானை வழிபடு கின்றனர். அப்பொழுதுதான் குரு வாயூர் க்ஷேத்திரம் சென்ற பலன்— புண்ணியம் கிடைக்கும் என்ற நியதி உள்ளது. இந்த "மான்மியூர்"தான் நாளடைவில் பேச்சு வழக்கில் திரிந்து தற்சமயம் "மம்மியூர்" என்று வழங்கி வருகிறது.

ஆலயம் :

குருவாயூர் இன்றைய கேரள ராஜ் யத்தில் நடுநாயகமான இடத்தில் இருக்கின்றது. வடக்கே வடமல பாரும், தெற்கே திருவாங்கூர்— கொச்சியும் இருக்க இவற்றுக்கு இடைப்பட்ட இடத்தில் இருக்கிறது. வடக்கே இருந்து வருவோர் ரயிலில் வந்தாலும்—காரில் வந்தாலும் "ஷோரனூர்" கடந்து, திருச்சூர் வந்து சேர வேணும். அங்கிருந்து மேற்கு நோக்கி, பதினாறு மைல் போய் அதன்பின் தெற்கே திரும்பி இரண்டு மைல் போனால் குருவாயூர் போய்ச் சேரலாம். காங்கிரீட் வசதி யுள்ள நல்ல சாலைவழியுள்ளது. பஸ் கள் ஏராளமாக சென்று வருகின்றன.

போகிற வழியில் எல்லாம் பலா மரங்கள், கமுகு மரங்கள், தென்னஞ் சோலைகள்தாம் கண்ணுக்கு மிகவும் இனிமையான—பசுமை நிறைந்த காக்ஷியாக இருக்கும். கோயிலுக்கு இடப்புறமாகச் சென்று, அங்கு தேவஸ்தானத்தார் கட்டி வைத்திருக் கும் 'தேவஸ்தானச் சத்திரத்திற்கு'ப் போய்ச் சேரலாம். சேவார்த்திகள் பெருகப் பெருக, சத்திரத்து வசதி களும் பெருகிக் கொண்டே இருக் கின்றன. அங்கு தங்கி, ஸ்நானம் எல்லாம் முடித்துவிட்டு, உடுத்திய வேட்டி, துண்டுடனேதான் கோயி லுக்குச் செல்ல வேண்டும்.

சிறிய கோயில்தான் என்றாலும், கோயில் வாயிலில் ஒரு யானையும், கோயில் பிராகாரத்தின் முன்னிலை யில் நான்கு யானைகளையும் தினசரி பார்க்கலாம். தவிர, கோயிலின் சிறிது தூரத்திலுள்ள "யானைக் கொட்டகை"யில் முப்பத்து நான்கு யானைகளைக் காணலாம். யானை கள், பசுக்கள், கன்றுகள் எல்லாம் கோயில் பரிபாலனத்திற்கு உட்பட் டவை என்பது குறிப்பாகும். "வேழ முடைத்து மலை நாடு" என்றல்லவா பாடினாள் ஔவை மூதாட்டி. ஆம், யானைகளையே "எழுந்தருளல்" முதலான கோயில் காரியங்களுக்கு உபயோகப்படுத்துவதால், ஒன்றுக்கு நான்காக யானைகள் கோயில் பிரா காரத்தில் வைக்கப்பட்டுள்ளன.

இங்கே கோயிலில் வாயிலில் எல் லாம்கூட கோபுரங்கள் இல்லை. ஆனால், உயர்ந்த தேக்கு, பலா மரத் தால் தட்டுத்தட்டாகச் கட்ட ஓடு போட்ட கூரை வேய்ந்திருப்பார்கள். அந்தக் கூரையையும் மூடிக்கொண்டு ஒரு பெரிய தகரக் கொட்டகை. இதைக் கடந்து வாயிலுக்கு வந்து, அதனையும் கடந்து உள்ளே வர வேண்டும். பகலாயினும் சரி – இர வாயினும் சரி - கோயிலினுள் கூடி யிருக்கும் மக்கள், "நாராயணா – நாராயணா" என்ற பகவந் நாம ஸ்மரணை செய்து கொண்டே நிற் பர். இந்த நாராயண ஸ்மரணை யைத் தவிர வேறு ஒன்றையுமே கேட்க முடியாது அங்கே! ஆம், அன்றே பாடினானே திருமங்கை மன்னன்.

"குலம்தரும் செல்வம் தந்திடும்
அடியார் படுதுயர் ஆயினஎல்லாம்
நிலம்தரம் செய்யும், நீள்விசும்பு
அருளும்
அருளொடு பெருநிலமளிக்கும்
வலம்தரும் மற்றும் தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான்கண்டு
கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்"

ஆம்! "நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன், நாரா

யணா என்னும் நாமம்" என்ற ஏக் களிப்பிலேயே, இந்த திருமங்கை மன்னனால் எப்படி பாட முடிந்தது என்று அறிய விரும்பினால், குருவா யூர் அப்பன் சந்நிதிக்குச் சென்றால் போதும்!

கோயிலுள் சென்றதும், தீபஸ்தம் பம் இருக்கும் கிழ்ப்பக்கத்து நடை பாதைக்கு வந்து சேருவோம். இப் படிக் கோயிலைச் சுற்றியிருக்கும் பிராகாரத்தையே மதிலகம் என்கின் றனர். அதன் தென்கிழ் மூலையில் கூத்தம்பலம் இருக்கிறது. அங்கு தான் மக்களை ஒருங்கே மகிழ்விக் கும் சிறப்பான கூத்துக்கள் நடக்கின் றன. விசேஷ காலங்களிலும், மற்ற காலங்களிலும் பாகவத பாராயணங் கள் நடக்கும். இதைக் கடந்து சற்று மேற்கே திரும்பினால், அங்கே ஒரு சாஸ்தா — ஐயப்பன் சந்நிதி. அவ ருக்கு வணக்கம் செலுத்திவிட்டு, பிராகாரத்தை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு வந்தால், திரும்பவும் கிழ் நடைபாதைக்கு வந்து, கோயிலினுள் நுழையலாம். இந்தப் பாதை மிகக் குறுகலாகவே இருக்கும்.

இந்த இரண்டு பக்கங்களிலுமுள்ள மண்டபங்களே வாயில் மண்டபங்கள். இவைகளைக் கடந்தே உள் கோயில் செல்ல வேண்டும். இதுதான் பிரா காரம். இந்தப் பிராகாரத்தின் மூலையில் விநாயகருக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. இங்குள்ள "ஆரத்துக் கெட்டிபடி" என்ற இடத்தில் இருந்து தான், மேல் பத்தூர் பட்டாத்ரி என்ற மகான், அவருடைய பிரபல மான 'நாராயணீயம்' என்ற பிரார்த் தனை நூலை எழுதினார் என்பர்.

இவற்றையெல்லாம் கடந்தபின், திரும்பவும் கிழ் வாயில் வந்து, கரு வரையில் உள்ள குருவாயூர் அப் பனைத் தரிசிக்க வேண்டும். குருவா யூரப்பன் சுமார் இரண்டடி உயரமே உள்ள இனிய வடிவினன்தான். புஷ் பாலங்காரம் பண்ணி வைத்திருப் பார்கள். இரவு வேளைகளில் சென் குடன் காட்சி தருவான். ஆனால், அவனை, அவன் மேனியை — அலங் காரம் இல்லாத மேனியைக் காண விரும்பினால், அதிகாலை மூன்று மணிக்கே கோயில் செல்ல வேண்டும். அப்பொழுது "டாண்-டாண்" என்று மணியோசை கேட்கும்.

கோயில் நடை திறந்ததும், இரவு இருந்த "புஷ்ப அங்கி" சேவை யிலும் காணலாம். பின்னர் மலர் களைக் களைந்து, தைலக் காப்பிடும் போது மேனியின் முழு அழகையுமே காணலாம். இதனைத் தான் "நிர் மாலய தரிசனம்' என்பர். சங்காபி ஷேகம், மலர் நைவேத்தியம் எல்லாம் நடந்தபின்,வாயில் கதவை அடைத்து விடுவார்கள். ஆனால், காலை ஏழு மணி சுமாருக்கு, யானைமீது குரு வாயூரப்பனின் தங்கச் சிலை யொன்றை ஏற்றி மதிலகத்தில் பவனி வருவர். அப்போது பன்னிரெண்டு விளக்குகள் ஏற்றிச் செல்வர். இவ் விளக்கு ஏந்திச் செல்லும் உரிமைசில அம்பலவாசி குடும்பத்தினருக்கே உண்டு. இது முடிந்த பின்தான் — "க்ஷீராபிஷேகம்" என்னும் பாலாபி ஷேகம் நடைபெறும்.

இது காலை எட்டரை மணிக்கு ஆரம்பமாகும். இந்த "க்ஷீராபி ஷேகம், நவகாபிஷேகம், பந்திரட்டி நைவேத்தியம்" பூஜையெல்லாம் காலை ஒன்பதரை மணி வரை நடக் கும். அடுத்த பூஜை உச்சிக் காலம் - மத்தியானம் பன்னிரெண்டரை மணிக்குத்தான். அதன்பின் கோயில் நடையைப் பூட்டி விடுவார்கள். திரும்பவும் மாலை ஐந்தரை மணிக்குத்தான் திறப்பார்கள். அப் போதும் ஒரு ஸ்ரீபலி ஊர்வலம் நடக் கும். இரவு எட்டு மணிக்கு, அத்தாள நைவேத்தியம், பூஜையெல்லாம் நடக் கும். கடைசியாக, திருப் புகை கொளுத்தி இரவு பத்தரை மணிக்கே நடை சாத்துவார்கள். கோயில் பிர சாதமாக சந்தனமும், மலர்களும் தான் கொடுப்பர். பால் பாயசம், கிடைக்கும்.

இங்கு நடக்கும் பிரார்த்தனை தினங்களில் சிறப்பானது துலாபார மும், குழந்தைகளுக்கு அமுதூட்டு தலும், திருமணம் செய்தலுமே! தண் ணீர் முதல் நவரத்தினம்வரை,ஆளின் எடைக்கு எடை தருவதாகப் பிரார்த் தித்துக் கொள்வர். அப்படியே பிரார்த்தனை செய்தவரையும், அவர் கொண்டு வரும் பொருளையும் நிறை போட்டுக் கோயில் அதிகாரிகள் பெற்றுக் கொள்வர். பிறந்த குழந் தைக்கு ஒரு வயதானதும் அமுதூட் டவும் குருவாயூரப்பன் கோயிலை நாடி வருவர் பலர்.

கோயிலில் கொடுக்கும் தீர்த்தம், நைவேத்தியம் முதலியவற்றை, முத லில் குழந்தைகளுக்குக் கொடுத்து, அதன்பின் அன்னம் (சோறு) கொடுப் பர். திருமணங்களையும் குருவா யூரப்பன் சந்நிதியிலேயே நடத்துவர் சிலர்.

பட்டோத்ரி :

இந்த அருள் தெய்வத்தினிடம் ஈடு பட்ட "நாராயண பட்டோத்ரிபாட்" என்ற அரும்பெரும் தெய்வக் கவிஞ ருக்குத் தீராத வாதநோய் உடனே தீர்ந்தது. இந்நோய் தீர இக்கவி ஞர் இயற்றிய அருள் சுரக்கும் நூலே "நாராயணீயம்" என்பது. இந்நூல் 1010 செய்யுட்களைக் கொண்டது. ஸ்ரீ வியாஸ பாகவதத்தின் வழி நூல் போல் அமைந்தது. இதைப் பாரா யணம் செய்வதினால் நினைத்த காரி யம் நிறைவேறும் அதிசயத்தை இன் றும் காணலாம்.

பட்டோத்ரி ஸ்ரீ கிருஷ்ண லீலை யில் தாமோதர விருத்தாந்தத்தைக் கூறி வரும்போது ஸ்ரீ கிருஷ்ணன் சினம் கொண்டு தயிர்ப் பானையை மத்தினால் உதைத்ததாகக்கூறி "அப் பனே! நான் கூறியது உண்மை தானா? பகவான் வியாஸர் அம்மிக் குழவியினால் உடைத்ததாகக் கூறி

கேட்டார்.

உடனே குருவாயூரப்பன் "அவர் உண்மையைக் கூறினார், நீங்கள் பொருத்தமாகக் கூறினீர்கள்" என்று பேசினாராம். அதே போல் — நரசிங் காவதாரக் கதையைப் பாடி வரும் பொழுது கடைசியில் "ப்ரஹ்லாத ப்ரியனே" என்று அப்பனை அழைத் தார். உடனே அப்பன் வாய் திறந்து "நான் ப்ரஹ்லாதனிடம் மட்டுமின்றி என் பக்தர்கள் யாவரிடமும் பிரிய முள்ளவன். நான் 'ஸர்வ ஜனப் பிரியன்" என்று திருவாய் மலர்ந் தார் என்றெல்லாம் சொல்வதுண்டு.

இத்தெய்வக் கவிஞர் கேரள ராஜ் யத்தில் நம்பூதிரி பிராமணக் குடும் பத்தில் பிறந்தவர். இவர் தந்தை 'மாத்ரி தத்தன்' என்பர். மலை யாள நாட்டில் "பொன்னானி" தாலுகாவில் மேப்பத்தூரில் ஒரு மடத்தின் அருகில் உள்ள "பெரு மன்னம்" என்ற கிராமத்தில் பிறந் தார். இவரது முன்னோர்கள் சிறந்த வேதாந்திகளாகவும், கவிஞர்களாக வும் உள்ளவர்கள். இவர் கி. பி. 16-வது நூற்றாண்டில் வாழ்ந்தார் என ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

இவர் சிறு வயதில் தனது வைதிகப் பரம்பரை பழக்கத்திற்கு மாறுபட்டி ருந்தார் என்றும் கூறுவதுண்டு. இவர் தமது பிறந்து வளர்ந்த ஊரைவிட்டு, இன்றைய திருருக்கு அருகிலுள்ள திருக்கண்டியூருக்குக் குடி ஏறினார். இவருக்கு அக்காலத்தில் அந்த ஊரில் பெரும் புகழ் பெற்ற அறிஞர் அச்யுத பிஷாரடியின் தொடர்பு ஏற்பட்டது. அவருக்கு மாணவராகவும் ஆனார். வடமொழியில் சிறந்த வல்லுநர் ஆனார். வேதம் மற்றும் சாஸ்திரங் கள், இலங்கியங்களில் அளவற்ற மேதையானார். இவர் பதினெட்டு நூல்களை எழுதினார்.

இவரை ஆதரித்தவர் அம்பலப் புழை ஸ்ரீ வேத நாராயணன் என்ற மன்னர்; சிறந்த மேதை. இவருடைய இவரது குருவான அச்யுத பிஷாரடி என்பவருக்கு வாத நோய் ஏற்பட்டுத் துன்புற்றார். சிஷ்யனான பட்டோத் திரி குரு பக்தியினால் அந்த நோய் தனக்கு வர வேண்ட, குருவின் நோய் சீடனுக்கு வந்துவிட்டது. குருவின் நோயால் சீடன் மிகவும் துன்ப மடைந்து கடைசியில் குருவாயூரப் பனை மிகவும் வருந்தி வேண்டி அவ ரைப்பற்றி "நாராயணீயம்" என்ற தொரு அருள் நூலை இயற்றினார். 1010 செய்யுட்கள் கொண்ட மிகவும் அருமையான அருள் பொழியும் இந் நூலில் ஒவ்வொரு பதத்தின் முடி விலும் "அப்பனே என்னை இக்கடும் நோயிலிருந்து காப்பாற்று வாயாக" என்று வேண்டி நின்றார்.

அப்பனுடைய கருணையினால் தீராத நோய் தீர்ந்தது. அப்பொழுது அப்பனுடன் உரையாடியும் நின்றார். இவரால் எழுதப்பட்ட நூல்களில் "தாது காவ்யம், சில்பரத்தினம், ப்ர க்ரியா ஸர்வஸ்வம்" என்ற நூல்கள் மிகவும் புகழ் பெற்றவை. இவ்வாறு போற்றப்பட்ட பட்டோத்ரியின் மூல மாய் ஏற்பட்ட அப்பன் பெருமை இன்றும் நம் நாடு முழுவதும் பரவி யிருக்கிறது.

சித்தி பெற்ற உபந்யாஸ சக்கர வர்த்தி காலஞ்சென்ற ஸ்ரீசேங்காலி புரம் அனந்தராம தீட்சிதர் அவர்கள் கண்ணீர் ததும்ப அப்பனைப் பற்றிக் கூறிய இனிய மொழிகள் - ஸ்லோகங் கள் இன்றும் நம் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

சித்திரை விஷு :

"சித்திரை விஷு" என்னும் சித் திரை மாதப் பிறப்பு, தமிழ் வருஷப் பிறப்பாகக் கருதப்படுகிறது. என்றா லும் தமிழ் மக்கள் பொங்கல் பண்டி கையைக் கொண்டாடுகிற அளவுக்கு, இந்த தமிழ் வருஷப் பிறப்பைக் கொண்டாடுவதில்லை. ஆனால், மலையாளிகளுடைய சிறப்பான பண் டிகை இந்த விஷுதான்!

கேரள மக்கள் வருஷப் பிறப்பை எவ்வாறு கொண்டாடுகிறார்கள், தெரியுமா? அதற்கு முந்திய நாள் இரவே வீட்டையெல்லாம் நன்றாகக் கழுவிச் சுத்தம் செய்து, வீட்டின் நடுக்கூடத்தில் அரிசி, காய் கனிகளை எல்லாம் சேமித்து வைத்து, அத் துடன் பட்டுப் புடவைகள், ஜரிகை வேட்டிகள், அங்க வஸ்திரங்கள் தங்க நகைகள் - காசுகள் எல்லாம் வைத்து, குத்து விளக்குகளும் ஏற்றி, விடிந்து எழுந்ததும் கண்ணைமூடிக்கொண்டே இந்தக் கூடத்திற்கு வந்து, முதன் முதலில் இந்த நல்ல சாமான்களையே பார்ப்பர்.

வீட்டில் உள்ள பெரிய அம்மா, கண்களைக் கைகளால் பொத்தி, கண்ணாமூச்சி விளையாட்டுப் போல, அழைத்து வந்து, சாமான்கள் வைத் திருக்கும் நடுக்கூடத்திற்கு வந்த பின் னரே கண்களைத் திறப்பர். வழியில் கண்களைத் திறந்து மற்ற சாமான் களைப் பார்த்துவிடக் கூடாதல்லவா? இந்த சாமான்களோடு அவரவர் வீட் டில் பூஜையில் இருக்கும் படங்களை சேகரித்து வைத்திருப்பர். இவற்றை எல்லாம்விட முக்யமானது வருஷப் பிறப்பன்று முதன் முதலில் குருவா யூரப்பன் முகத்தில் விழிப்பதுதான்!

"அந்த வருஷம் முழுவதும் நல்ல பலன்களைத் தரும்" என்ற உயர்ந்த நம்பிக்கை காரணமாக—அதற்கு முந்திய இரவே, ஆண்களும், பெண்களும், குழந்தைகளுடன் ஆயிரக்கணக்காகக் "குருவாயூர்" கோயிலுக்குச் சென்று, அதன் பிரா காரங்களில் படுத்துக்கிடப்பர். காலை மூன்று மணிக்குக் கோயில் நடை திறந்ததும், கண்களை மூடியபடியே விழுந்தடித்து ஓடி வந்து, ஸ்ரீ குரு வாயூரப்பனைத் தரிசித்து விட்டே மற்றவர்களைப் பார்ப்பர்.

இப்படிப் பார்க்கிறவர்கள் ஏதோ சாதாரணப் பொது மக்கள் என்று மாத்திரம் எண்ண வேண்டாம். பெரிய பெரிய உத்தியோகஸ்தர்கள்.



கோயிலுக்குள் துலாபாரம்

பெரிய வீட்டுப் பெண்கள்கூட, அன்று குருவாயூரப்பன் தரிசனத்துக்குக் காத்துக்கிடப்பர். அவரவர் அணிந்திருக்கும் துண்டுகளையோ சேலை முந்தானைகளையோ விரித்து அதில் தான்படுத்து நித்திரை செய்வர். இந்த விஷு தரிசனம் ஆண்டுதோறும் மிகச்சிறப்பாக நடக்கிறது. தொலை தூரத்தில் இருக்கும் நமக்கெல்லாம் விஷுவன்று ஸ்ரீ குருவாயூரப்பனைக்கண்டு தரிசிக்கும் வாய்ப்புக் கிடைக்கும் என்பது எளிதான காரியமில்லைதான்! அதனால், கேரளத்து மக்கள் எங்கு குடியேறினாலும் விஷுவன்று இவ்வழக்கத்தையே கடைப்பிடிக்கின்றனர். நிச்சயம் அவர்கள் வீட்டில் ஸ்ரீ குருவாயூர் அப்பன் படம் இருக்கும்.

அப்பனின் அற்புத லீலைகள் :

அவ்வப்பொழுது பற்பல அற்புத அருள் நிகழ்ச்சிகளை அப்பன் காட்டி வருவதை யாவரும் அறிவர். ஒரு சமயம் ஒருவர் குடும்பத்துடன் அப்பனைத் தரிசித்துவிட்டு மாலையில் ஊருக்கு ஒரு குதிரை வண்டியில் திரும்பினார். பாதையில் இருட்டிவிட்டது. வண்டிக்காரன் கொள்ளையடிக்கும் கெட்ட எண்ணத்துடன், வண்டியை திசைத் திருப்பி, பாதையில் வண்டியை நிறுத்திவிட்டு அவர்களை மாய்க்க எண்ணி அருகே இருந்த ஒரு பாறையை எடுத்தான். பாறையின் அடியில் இருந்த "நண்டுவாக்கிளி" (நட்டு வாக்காளி) அவனைச் கொட்ட அங்கேயே அவன் நினைவிழந்து வீழ்ந்தான். தற்செயலாய் அப்பக்கம் வந்த போலீஸ் ஜீப் வண்டி அவர்களைக் காப்பாற்றியது போன்ற அதிசய நிகழ்ச்சிகளைக் காட்டித் தன் பெருமையை விளக்கி மக்களுக்கு அருள்புரியும் அப்பனை அடிபணிந்து நிற்போம்.

தவிர, இந்த குருவாயூரப்பனுக்கு மதில்களோடு கூடிய கோயில் எடுத்திருப்பது ஒரு பாண்டிய மன்னனே! ஆம், அம்மன்னனும் பாம்பொன்றினால் தீண்டப்படுவான் என்று புரோகிதர் சொல்ல, அவன் குருவாயூரப்பனை வணங்கி, அந்த சாப விமோசனம் பெற்றிருக்கிறான். இன்னும் ஸ்ரீ குருவாயூரப்பனின் அற்புத லீலைகள் அனந்தம்.

மைசூர் ராஜ்யத்தை மாண்புடன் அரசாண்ட திப்புசுல்தான், இப்பக்கம் படை எடுத்து வந்தபோது, அவனைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் படைத்திருந்தவன் ஸ்ரீ குருவாயூர் அப்பன்தான் என்பார்கள். இக்கோயிலுக்கு திப்பு சுல்தான் ஏற்படுத்தியிருக்கும் நிபந்தங்கள் அனந்தம்! இவைகளைச் சரித்திரம் பேசும்!

அக்காலத்தில் ஹரிஜனங்களைக் கோயிலுக்குள் அனுமதிப்பதில்லை; ஏகாதசியன்று மட்டும் இதற்கு விதிவிலக்கு உண்டு. ஒரு ஏகாதசியன்று ஹரி ஜனங்கள் பந்தி பந்தியாகக் கோயிலினுள் நுழைந்த போது, ஒரு வயோதிகப் பிராம்மணர் வருந்தினாராம். அச்சமயம், கோயிலினுள் இருந்த வில்வ மங்கள சாமியார், அந்த அந்தணருக்கு ஹரிஜனங்கள் ஒவ்வொருவரும், ஒவ்வொரு குருவாயூரப்பனாகக் காட்சி கொடுத்தார்களாம்.

மேலும், பூந்தானம் நம்பூத்ரி என்பவர் ஒரு பிரார்த்தனை நூலை இயற்றி அதை நாராயணீயம் பாடிய மேல் பத்தூர் பட்டாத்திரியிடம் காட்டப் போனபோது, அதை அவர் அலக்ஷ்யப்படுத்திவிட்டாராம். ஆனால், அன்று இரவு பட்டாத்திரியின் கனவில் குருவாயூரப்பன் தோன்றி, 'உன்னுடைய விபத்தியை விட, நான் பூந்தானத்தின் பக்தியையே மதிக்கிறேன்" என்றாராம். மறுநாள் பூந்தானத்தைத் தேடிச் சென்று அவரை வணங்கி அந்நூலை அனுமதித்தார் எனக் கூறப்படுகிறது. இன்று அக்காவியம் சிறந்த நூலாகக் கருதப்படுகிறது.

மக்கள் இந்த அப்பனை இந்தக் கலிகாலத்தில் கண்கண்ட தெய்வமாக வழிபடுவதில் வியப்பில்லை. மலையாளிகளுக்கு மட்டும் என்ன, "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற தமிழனுக்கும் அவர் கண்கண்ட தெய்வந்தான்! உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை!



# சித்தூர் மாவட்டத்தில் கங்கையம்மன் திருவிழா



வேஷாலம்மன்-திருப்பதி.

ஆதி மனிதர்களின் வாழ்வு நிலையிலேயே கிராமதேவதை வழிபாடு இருந்து வந்ததை அறிய சான்றுகள் பல உள. இந்திய நாடு 85% விழுக்காடு கிராமங்களைக் கொண்ட நாடு. இக்கிராமங்களிலே வாழும் நாட்டுப்புற மக்கள் தங்களது கலாச்சாரப் பண்பாடுகளிலும், பழக்க வழக்கங்களிலும் நெறி தவறாது தேவதைகளுக்குப் பூசைகளையும், விழாக்களையும் எடுத்து வருவதைக் காண முடிகிறது. ஆந்திர மாநில சித்தூர் மாவட்டத்தில் வாழும் தமிழரும், தெலுங்கரும் பல்வேறு கிராம தேவதைகளை வழிபடுகின்றனர். சில தேவதைகளுக்கு ஆண்டுக்கொருமுறை விழா எடுத்துக் கொண்டாடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். சித்தூர் மாவட்டத்தில் குறிப்பிடும்படியாக எல்லா மக்களாலும் வழிபடும் தேவதை "கங்கையம்மன்" ஆகும். இத்தேவதைக்குத் தமிழர்களும், தெலுங்கரும் தங்களது பொருளாதார நிலைமைக்கு ஏற்ப விழா எடுப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இத்திருவிழாவை தமிழர்கள் "கெங்கஜாத்ர, கெங்கம்மா ஜாத்திரை, மாரியாத்தா திர்ணா, மாரியம்மன் திருவிழா என்றெல்லாம் அழைப்பர். அதுபோலவே தெலுங்கரும் "கங்கம்மா ஜாத்ரா, கெங்கஜாத்ரா, கெங்கபண்டகா" என்றெல்லாம் அழைப்பதுண்டு. நாட்டுப்புற தேவதைகளுள் முதன்மை வாய்ந்தவளாகவும், சிறப்புப் பெற்றவளாகவும் மக்கள் நம்புகின்றனர். "யாதவர்" என்ற இனத்தவர்கள் கங்கையம்மனைத் தங்களுடையக் குல தேவதையாகக் கருதி வழிபட்டு வருகின்றனர்.

சித்தூர் மாவட்டம் முழுவதும் கங்கையம்மனுக்கு சித்திரைத் திங்களில் விழா எடுக்கின்றனர். இடத்தை அடிப்படையாகக்கொண்டும், ஊர்கள் பெயரைக் கொண்டும் கங்கையம்மனுக்குப் பல பெயர்கள் உண்டு. குறிப்பாகவும் சிறப்பாகவும் 1. பலமனேர் கங்கையம்மன், 2. புங்கனூர் கங்கையம்மன். 3. மொகிலி கங்கையம்மன், 4. மதனபல்லி கங்கையம்மன், 5. தூக்குன்றம் கங்கையம்மன், 6. சித்தூர் கங்கையம்மன், 7. திருப்பதி கங்கையம்மன், 8. புத்தூர் கங்கையம்மன், 9. நகரி கங்கையம்மன் போன்றவற்றைச் சொல்லலாம்.

டாக்டர். ஜா. மனுவேல்,
ஆமுதாலா.

மேற்கண்ட இடங்களில் சித்திரைத் திங்களில் கங்கையம்மனுக்குச் சிறப்பாக விழா எடுக்கின்றனர்.

**விழா எடுக்க காரணம் :**

'கங்கை' என்றால் தண்ணீர் என்று பொருள்படும். சித்திரைத் திங்களில்



தாதய்யகுண்ட்ட கங்கையம்மன் கோயில்-திருப்பதி.

சூரியன் இந்தியாவின் மீது ஓடும் கற்பனைக்கோடான கடகை ரேகையில் செல்வதால் இந்தியா முழுவதும் வெயில் சுட்டெரிக்கும். நீர் நிலைகளில் உள்ள நீர் உடனுக்குடன் ஆவி ஆகிவிடும். மக்களும், மற்ற உயிரினங்களும் நீரின்றித் தவிப்பர். அத்தகைய ஓர் நிலைமையை இன்றும் நாம் கண்கூடாகக் காணலாம். எனவே இத்தகைய ஒரு சூழ்நிலை ஏற்படாவண்ணம் பாதுகாத்தருள மழைதேவதையை (கங்கையம்மனை) ஆதிமுதற்கொண்டு வணங்கி வந்துள்ளனர். மேலும் நகரி, சத்தியவேடு, புத்தூர் போன்ற மாவட்டங்களில் வாழும் தமிழர்கள் கங்கையம்மன் திருவிழாவை "மாரியாத்தா திருவிழா" என்று அழைப்பர். "மாரி' என்றால் 'மழை'. மழையைப் பொழிவுக்கும் அம்மன் என்று பொருள்பட கங்கையம்மனை அழைப்பதுண்டு. எனவே மழை வேண்டி அம்மனுக்கு விழா எடுப்பதாகக் கொள்ளலாம்.

மேலும் நமது உணவில் நீரானது பெரும் பங்கு வகிக்கின்றது. நீரினால் மக்களுக்குப் பலவிதமான நோய்கள் வருவதுண்டு. குறிப்பாக காலரா, அம்மை, பிளேக், போன்ற



தாள்ளபாக்க கங்கையம்மன்.

நோய்கள் நீரின் மூலமாக மக்களிடையே பரவக்கூடியவை. அத்தகைய நோயினின்றும் தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்றும் கங்கையம்மனை ஆராதிக்கின்றனர்.

கங்கையும் வேப்பிலையும் :

கங்கையம்மன் திருவிழாவில் எல்லா இடங்களிலும் வேப்பிலையை விசேடமாகக் காணலாம். மக்கள் தங்களது வீட்டுக் கூரைகளிலும், வாசற்படிகளிலும், வீதிகளிலும், கூழ்பானைகளிலும், நெருப்புச் சட்டிகளிலும், தோரணம் கட்டித் தொங்கவிட்டிருப்பர். அறிவியல் கண்ணோட்டத்துடன் இதனை நோக்குவோமானால் இத்தகைய செயல்பாட்டிற்குப் பயனுள்ள நன்மைகள் இருப்பதை அறியலாம். தண்ணீரில் உள்ள நோய்க் கிருமிகளை அழிக்கும் சக்தி வேப்பிலைக்குஉண்டு. தண்ணீரில் சிலநேரம் வேப்பிலையைப்போட்டு வைத்தால் தண்ணீர் நோய்க்கிருமியின்றித் தெளிவடைந்துவிடும்.

இதனை வெளிப்படுத்தும் வகையில் கிராமங்களில் உள்ள குடிநீர் கிணற்றுக்கருகில் வேப்ப மரங்கள், மா மரங்கள் இருப்பதைக் காணலாம். எனவே பொதுவாக தண்ணீரில் உள்ள நோய்க்கிருமிகள் அகல வேப்பிலையைப் பயன்படுத்திய பழக்கம் பிற்காலத்தில் நாட்டுப்புற மக்களிடையே வழக்கமாக மாறிவிட்டது எனக் கொள்ளலாம்.

சாற்றுதல் :

கிராமத்து நாட்டாண்மை ஆலோசனையின்பேரில் திருவிழா தேதி குறிக்கப்படும். பத்து நாட்களுக்கு முன்னர் இத்தேதியினை 'பறை முழங்க' ஊர் முழுவதும் அறிவிப்பர். இதனையே 'சாட்டு' என்று மக்கள் அழைக்கின்றனர். அன்று ஊர்ப் பெரியவர்கள் சிலர் அம்மனுக்குப் பூசை செய்துவிட்டு ஆடு, எருமை, கோழி போன்றவற்றைப் பலி கொடுத்து, இரத்தம் கலந்த



தாதய்யகுண்ட்ட கங்கையம்மன்.

சோற்றை எடுத்துக் கொண்டும், ஆட்டுக் குடலை கழுத்தில் மாலைபோல் போட்டுக்கொண்டும் கிராமத்தைச் சுற்றிலும் வலம்வருவர். வரும்போது சோற்றை இரைத்துக் கொண்டு வருவர். வேறொருவர் எலுமிச்சைப் பழத்தை அறுத்துச்சாறு பிழிந்தவண்ணம் வேகமாக வருவதுண்டு. இவர்களுக்கு அருகில் வருபவர்கள் கிலோ......லோ......லோ என்று உரத்த சத்தம் போட்டுக் கொண்டு வருவர். திருவிழாவுக்கு முன்னதாக ஊரைச் சுத்திகரிப்புச் செய்யவும், அசுத்த ஆவிகள் ஊருக்குள் நுழைந்து வியாதியை உண்டாக்கி மரணத்துக்குள்ளாக்காமல் தடுப்பதற்காகவும் இத்தகைய செயலை மேற்கொள்வர் என்று சொல்லலாம். மேலும் திருவிழாவுக்கு ஆயத்தப்படுத்தும் வகையிலேயும் இந்நிகழ்ச்சி அமைந்துள்ளது என்றும் கொள்ளலாம். இவ்வாறு சாட்டும்போது வெளியூர்க்காரர்கள் சாட்டில் அகப்பட்டுக்கொண்டால் கண்டிப்பாக விழா நாளில் அவர்கள் அந்த ஊரில் இருக்க வேண்டும். இத்தகைய வழக்கம் தமிழர்களிடையேயும், தெலுங்கரிடையேயும் ஒன்று போலவே காணப்படுகிறது. சாட்டில் அகப்பட்டுக்கொண்டு திருவிழா

வில் பங்கேற்கவில்லையென்றால் அம்மனால் கேடு விளையக்கூடும் என்ற நம்பிக்கை மக்களிடையே வேரூன்றியுள்ளது. எனவே பெரும்பாலோர் அத்தகைய ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு தவிப்பதில்லை.

**கூழ் ஊற்றல் :**

திருவிழாவின் தொடக்க நிகழ்ச்சி 'கூழ் படைத்தல்' என்பதாகும். செவ்வாய்க் கிழமைக் காலையில் இந் நிகழ்ச்சியினைச்செய்வதுண்டு. அன்று அம்மனுக்குப் பூசை மேற்கொள்வர். கிராமத்தின் நடுப்பகுதியில் பானைகள், 'கொப்பரை' போன்றவை வைக்கப்பட்டிருக்கும். இதனையே கூழ்ப்பானை என்பர். இப்பானைகளின் வாய்ப்பிரம்பில் வேப்பிலைத் தோரணம் கட்டித் தொங்கவிட்டிருப்பர். அக்கிராமத்தில் உள்ள அனைவரும் புளித்தக் கூழைக் கொண்டு வந்து தெருவில் வைக்கப்பட்டப் பானைகளில் ஊற்றுவர். பின்னர் பூசாரி பூசை செய்வர். கூழ்பானைகளைச் சுற்றி கிராமத்துச் சிறுவர்களை அமரச்செய்வர். அவர்களுக்குக் கூழ் பரிமாறுவதுண்டு. அச்சிறார்கள் கூழைக் குழத்தவுடன் அனைவரும் ஒன்றாகக் கிழக்குத் திசையை நோக்கி விரட்டுவர். அந்நேரம் அவர்களின் தலையில் வேப்பிலையைக் கொண்டுத் தண்ணீரைத் தெளிப்பதுண்டு. கூழைக் குடித்துவிட்டு "அம்மை நோய்" கிராமத்தைவிட்டு விலகுவதாக மக்கள் நம்புகின்றனர். பின்னர் பக்தர்கள் ஒன்றுகூடி கூழைக் குடிப்பார்கள். இத்துடன் கூழ் ஊற்றும் நிகழ்ச்சி முடிவடைந்து விடுகின்றது. அன்று இரவு புகழ்பெற்ற நாடகக் குழுவினரால் நாடகம் நடத்துவிப்பர்.

**உருவ வழிபாடு :**

சித்தூர் மாவட்டத்தில் கங்கையம்மனுக்கு உருவ வழிபாடு அமைப்பதில் காலத்தைப் பொறுத்து இரண்டு முறைகளைக் கையாளுகின்றார்கள். கங்கையம்மனுக்குத் திருவிழா எடுக்கும் நகர்ப்புறங்களில் திங்கள் இரவு



அங்காளம்மன் கோயில்-இருப்பதி.

கங்கையம்மன் உருவத்தை நிலை நிறுத்துவர். திருப்பதியில் மட்டும் செவ்வாய் இரவு நிலை நிறுத்துவர். மற்ற மாவட்டம் முழுவதும் உள்ள கிராமங்களில் புதன்கிழமை நண்பகல் ஒன்று அல்லது இரண்டு மணியளவில் கங்கையம்மனுக்கு உருவம் அமைக்கின்றார்கள். பெரும்பாலான இடங்களில் களிமண், உமி, கல், செங்கல் போன்றவற்றில் உருவம் அமைப்பதுண்டு.

**பொங்கலிடுதல் :**

புதன் கிழமை கங்கையம்மனுக்கு உருவம் அமைத்தவுடன் கிராமத்துப் பெண் பிள்ளைகள் மேளம் முழங்க ஆரவாரத்துடன் பொங்கல் பானையைத் தலையில் ஏந்தி கோயிலுக்கருகில் கூடுவர். வரிசை வரிசையாக அமர்ந்து பொங்கல் சோற்றுப் பானையைக் கிண்டுவது, புகை மூட்டத்தால் பெண்கள் தங்களது கண்களைக் கசக்குவது, போன்றவை பார்க்க வேடிக்கையாய் இருக்கும். சோறு சமைத்தப் பின்னர் அம்மனுக்கு மாவு விளக்குப் படைக்க மறுபடியும் வீட்டுக்குச் செல்வர். இந்நிகழ்ச்சி கிராமப் புறங்களில் வேடிக்கையாக நடைபெறும். பெண்கள் அனைவரும் புத்தாடை அணிந்து அரிசி மாவு வெல்லம் கலந்த பாகில் விளக்கேற்றி கையில் ஏந்தி வருவர். அந்த மாவு உருண்டைக்கும் வேப்பிலைக் கட்டப் பட்டிருக்கும். ஆண்கள் பலியிடப் படும் எருமைக்கிடாவை வீடு வீடாக இழுத்துச் செல்வர். அந்த எருமாட்டின் கழுத்தில் வேப்பிலைக் கட்டப் பட்டிருக்கும். கிராமத்தில் உள்ள அனைவரும் அந்த எருமை மாட்டின் மீது மஞ்சள் நீரை ஊற்றுவர். இறுதியாக அனைவரும் கங்கையம்மன் கோயிலைச் சேர்வதுண்டு.

**பூசை முறைகள் :**

பொதுவாக கிராமத்துப் பூசாரி, அல்லது வண்ணான் அல்லது சலவாதி என்பவர்கள் முன்னின்று அம்மனுக்குப் பூசை நடத்துவிப்பார்கள். பூ, பழம், தேங்காய் கருப்பு வளையல், காதுமட்டை, புத்தாடை, பொங்கவிட்டச் சோறு, மாவு உருண்டை போன்றவற்றைப் படைப்பதுண்டு. வீட்டுக்கொரு பொங்கல் பானையில் ஒரு அகப்பை பொங்கல் சோற்றையும் மாவு உருண்டையில் சிறிதளவும் எடுத்து அம்மனுக்கு முன்பு வைப்பதுண்டு. பின்னர் எருமை, ஆடு, கோழி போன்றவற்றை அம்மனுக்குப் பலி இடுவர். பலி இடும் வழக்கம் சித்தூர் மாவட்டத்தில் பொருளாதார அடிப்படையிலும், உணவுப் பழக்க

### தி. தி. தேவஸ்தானத்தாரின்
## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப் படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

வழக்கங்களின் அடிப்படையிலும் நடைபெறுவதைக் காணலாம். பெரும்பாலான ஆதி-திராவிட மக்களும், ஆதி-ஆந்திரர்களும் எருமைக் கிடா, கோழி போன்றவற்றைப் பலியிடுகின்றனர். பலியிட்ட விலங்கின் தலை அக்கிராமத்து வண்ணானுக்குக் கொடுத்துவிடும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. பலி இட்ட பின்னர் பொங்கல் பானையுடன் கங்கையம்மன் கோயிலை மூன்று முறை வலம் வந்தவுடன் வீடு சேர்வர். இதோடு பூசை நிகழ்ச்சி முடிவடைகின்றது. ஊர் நாட்டாண்மை மற்றும் பெரியவர்கள் அம்மனுக்குப் படைத்தப் பொங்கலையும், மாவுப் பொருளையும் சமமாகப் பங்கிட்டு கிராமத்து மக்களுக்கு பிரசாதமாக அளிப்பதுண்டு.

**வேடிக்கையும் வினோதமும் :**

கங்கையம்மன் திருவிழாவில் பலர் பலவாறு நேர்ந்துக்கொள்வதைக் காணலாம். அவரவர் நேர்ந்துக் கொண்டதற்கு ஏற்ப அவர்களின் வெளிப்பாடுகள் அமைந்திருக்கும். பொதுவாக பலர் அன்று மாறுவேடம் போட்டு பாட்டுப்பாடியும், நடனம் ஆடியும் மகிழ்வர். வேறுசிலர் மாமன் முறை உள்ளவர்களிடம் பணம் வசூலிப்பதும் உண்டு. மாறு வேடம் போட்டு வீடு தேடி வந்தவர்களுக்குக் கண்டிப்பாகப் பணம் போடும் வழக்கம் இம்மக்களிடையே பரவலாகக் காணப்படுகிறது. கிராமப்புறங்களில் பெரும்பான்மையோர் பாண்டவர்கள்போலும் கிருஷ்ணன், திரௌபதி போன்றவர்கள் போலும் வேடம் போடும் வழக்கம் இன்றும் உள்ளது. சிலர் ஊர் மக்களை மகிழ்விக்க குறத்தி, குறவன், குருவிக்காரர், கோமாளி போன்ற வேடங்களைத் தரிப்பதும் உண்டு.

புதன்கிழமை மாலை எல்லா கிராமங்களிலும் நாடகம் நடத்துவிப்பர். வாலிபர்கள் விளையாட்டுப் போட்டிகள் நடத்துவர். வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசும் வழங்குவதுண்டு. பொதுவாக சித்தூர் மாவட்டத்தில் கங்கையம்மன் திருவிழா மிகவும் சிறப்பாகவும், கோலாகலமாகவும் நடைபெறுகின்றது என்பது வெள்ளிடைமலை.

புகைப்படங்கள்:
எம். ராஜ்யலட்சுமி-திருப்பதி.

# இராமர் நடத்திய நாடகம்

திரு. வேணு சீனுவாசன்,
கல்பாக்கம்.

ஆஞ்சநேயர் சீதாப்பிராட்டியிடம் இருந்து கணையாழி, சூளாமணி ஆகியவற்றை அடையாளமாகப் பெற்றுக் கொண்டு, இலங்கையிலிருந்து திரும்பிவந்து கொண்டு இருந்தார்.

அவர் மனத்தில், என்னைத் தவிர வேறு யாரால் இந்தக் காரியத்தை செய்து இருக்க முடியும்? என்ற கர்வம் ஒரு கணம் தோன்றியது.

ஒன்றன் பின் ஒன்றாக அவர் செய்த வீரச் செயல்கள் நினைவுக்கு வந்தன. எவ்வளவு பெரிய கடலைக் கடந்தேன். பராக்கிரமம் வாய்ந்த லங்கிணியை வென்றேன். தேடாத இடமெல்லாம் தேடி ஜானகியைக் கண்டேன். அசோக வனத்தை அழித்தேன். அரக்கரை கொன்று ஒழித்தேன். இலங்கையை எரித்தேன். ஆஹா எனது திறமையும், ஆற்றலும் அளவிடமுடியாதது என்று தன்னைத்தானே பாராட்டி, பெருமைப்பட்டுக் கொண்டார்.

அப்போது காலைக் கடன்களை ஸ்நான பானாதிகளை முடிக்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தான் கொண்டு வந்த சூளாமணி, கணையாழி ஆகியவற்றைப் பொறுப்பாக யாரிடமாவது கொடுத்துவிட்டுத் தன் வேலைகளை முடிக்க எண்ணினார் அவர். மரத்தடியே ஒரு முனிவர் தவநதில் இருந்தார். அவரிடம், சென்று 'முனி சிரேஷ்டரே நான் அஞ்சனை புத்திரன்வாயுகுமாரன். இலங்கையில் இருந்து சீதாப்பிராட்டி கொடுத்த கணையாழி,சூளாமணி ஆகியவற்றை இராமபிரானுக்காகக் கொண்டு செல்கிறேன். இதைச் சிறிது நேரம் தங்கள் பொறுப்பில் வைத்திருக்க வேண்டுகிறேன். அந்த நேரத்தில் நான் எனது காலைக் கடன்களை முடித்துக் கொள்கிறேன்' என்றார்.

கண்ணைத் திறந்து பார்த்த முனிவர், "ஆஞ்சநேயா, உலகப் பந்தங்களைத் துறந்த நான் மனிதருக்கு சொந்தமான பொருட்களை கையால் தொடமாட்டேன். ஆகவே நீ அவைகளை இந்தக்கமண்டலத்தில் போட்டு விடு. உன் வேலைகளை முடித்துக் கொண்டு வந்து எடுத்துக் கொள்" என்றார்.

'அப்படியே ஸ்வாமி' என்ற ஆஞ்சநேயர் கணையாழி, சூளாமணி ஆகியவற்றை கமண்டலத்தில் போட்டு விட்டுச் சென்றார். சிறிது நேரத்தில் திரும்பி வந்து 'முனி சிரேஷ்டரே நான் போட்டவற்றை எடுத்துக் கொள்கிறேன்' என்று சொல்லி கமண்டலத்தில் கையை நுழைத்தார்.

என்ன ஆச்சரியம்! அந்த கமண்டலத்திற்குள் ஏராளமான கணையாழிகளும், சூளாமணிகளும் காணப்பட்டன. இதில் இராமபிரானுக்காக சீதை கொடுத்தது எது? எனக் குழம்பித் தவித்தார் ஆஞ்சநேயர்.

சிறிது நேர தயக்கத்திற்குப் பிறகு முனிவரைப் பார்த்து 'ஸ்வாமி, இவற்றில் நான் கொண்டுவந்தது ஏது? புரியாமல் தவிக்கிறேன். அருள் கூர்ந்து உதவி செய்யுங்கள்' என்றார். அதற்கு முனிவர், 'என்ன அப்பா, கடலைத் தாண்டிய திறமைசாலி நீ, அரக்கரை அழித்த பலசாலி நீ. உன் திறமையும், பலமும் யாருக்குவரும். உனக்கு நான் உதவி செய்வதா? உன் அறிவும் திறமையும் கொண்டு நீ கொண்டு வந்த கணையாழியையும், சூளாமணியையும் கண்டு பிடிக்க முடியவில்லையா?' என்று ஏளனம் செய்தார்.

ஆஞ்சநேயர் அறிவின் சிகரம் அல்லவா? முனிவர் சாதாரண ஆள் அல்ல என்பதையும், தன் கர்வத்துக்கு சரியான பதிலடி கிடைக்கிறது என்பதையும் உணர்ந்து கொண்டார்.

ஆகவே 'முனிபுங்கவரே, இந்த கமண்டலத்தில் எப்படி இத்தனை சூளாமணிகளும்,கணையாழிகளும் வந்தன' என்று விநயத்தோடு கேட்டார். 'ஒவ்வொரு இராமாவதாரத்தின் போதும் ஒரு ஆஞ்சநேயர் தோன்றுவதும், அவர்கள் சீதாப்பிராட்டியிடம் இருந்து அடையாளம் பெற்றுத் திரும்புவதும் என்னிடத்தில் வந்து சிறிது நேரம் வைத்திருக்கச் சொல்வதும் பலமுறை நடந்த கதை. கமண்டலத்தில இருப்பவை பல ஆஞ்சநேயர்கள் பல இராமாவதார காலத்தில் போட்டுவிட்டுச் சென்ற கணையாழிகள், சூளாமணிகள். என் யோக சித்தியால் அவற்றை உனக்குக் காட்டினேன்' என்றார் முனிவர்.

இதைக் கேட்டதும் ஆஞ்சநேயரின் கர்வம் சூரியனைக் கண்ட பனிபோல விலகியது. என்னைத் தவிர வேறு யாரால் இந்தக்காரியத்தைச் செய்ய முடியும் என்று கர்வப் பட்டதைக் குறித்து வெட்கம் அடைந்தார். பல ஆஞ்சநேயர்கள் பல முறை சாதித்த காரியத்தையே நானும் இப்போது செய்திருக்கிறேன். இதில் பெருமை என்ன இருக்கிறது? செத்த பாம்பை அடித்து விட்டதில் வீரம் வேறா? ஆஞ்சநேயர் தலை கவிழ்ந்தார்.

முனிவர் உடனே மறைந்தார். அந்த இடத்தில் உடனே ஸ்ரீ இராமபிரான் தோன்றினார். ஆஞ்சநேயருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. 'பிரபு தாங்களா?' என்றார். 'ஆமாம் உனக்கு ஏற்பட்ட கர்வத்தை அழிக்கவே நான் இப்படி ஒரு நாடகம் ஆடினேன். எனக்குப் பிரியமானவர்களுள் முதன்மையானவன் நீ. உன் உள்ளத்தில் தான் என்ற அகங்காரம் தோன்றி விட்டது. அதை முளையிலேயே கிள்ளி எறியவே உன் வழியில் முனிவராக அமர்ந்தேன். என் கையில் உள்ள கருவியே நீ என்பதை புரிந்து கொள்' என்றார்.

'மன்னிக்கவேண்டும் பிரபு. ஒருநிமிடம் சலனப்பட்டு விட்டேன்' என்ற ஆஞ்சநேயர் இராமபிரானை நமஸ்கரித்தார். ★

# துளசியின் மகிமையும் பெருமையும்

முன்னுரை :

பரந்தாமன் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கிறார். அவருக்கு உகந்தது துளசி மாலைதான். துளசி உடலுக்கு உஷ்ணத்தை கொடுக்கக் கூடியது. பாற்கடலோ குளிர்ந்த இடமாகும். இவ்வாறு இந்து மதத்தில் காரண காரியமாகத்தான் பல ஒன்றுக்கொன்று பின்னணியாக உள்ளது. அவற்றை ஆழ்ந்து பார்த்தால் தான உண்மை புலப்படும். மேலெழுந்த வாறு பார்த்தால் உயரிய நோக்கங்கள் எளிதில் புலப்படாது. அப்படித்தான் துளசியின் மகிமை. துளசிக்கு தமிழில் துழாய், குல்லை, துளபம், வனம், பிருந்தம், துளவு எனப் பெயர்கள் பல உண்டு. வழக்கில் மக்கள் ஸ்ரீராமர் துளசி, கிருஷ்ண துளசி என்றும்; சிலர் நல்ல துளசி, நாய் துளசி எனவும் கூறுவர். சித்த மருத்துவர்கள் துளசி, கருந்துளசி, செந்துளசி எனக் குறிப்பிடுகின்றனர். பொதுவாய் துளசியிருக்கும் இடத்தில் சர்ப்பம் அண்டாது என்பர்.

இல்லத்தில் துளசி :

இல்லங்களில் தனியே பின் பக்கத்தில் மாடங்கட்டி துளசியை வளர்க்கிறார்கள். துளசியில் பிருந்தாதேவி இருப்பார் எனக் கூறுவர். எனவே இல்லத்தில் தினமும் துளசி மாடத்தினை நன்கு நன்னீரால் சுத்தம் செய்து, கோலமிட்டு, மஞ்சள், குங்குமமிட்டு, புஷ்பம் சாத்தி, தீபம் ஏற்றி, ஸ்ரீ துலஸ்யை நம: என பெண்கள் ஜெபிக்கவும். அதன் தியான ஸ்லோகம்:

"யந்மூலே ஸ்ர்வ தீர்த்தாநி யந்மத்யே
ஸர்வதேவதா:
யதக்ரே ஸ்ர்வ வேதாஸ்ய துலஸீம்
தாம் நமோம்யஹம்
நமஸ்துலஸி கல்யாணி நமோ விஷ்ணு
ப்ரியே சுபே
நமோ மோக்ஷப்ரதே தேவி நமஸ்
ஸ்ம்பத் ப்ரதாயிகே

மூன வலவந்து வழிபட்டு, பூஜித்தால் ல ஐஸ்வர்யங்களும், மங்களங் ரும உண்டாகும் என்பது திண்ணம்.

துளசி பத்திரத்தை நியமத்துடன் பறிக்க வேண்டும். அப்படி அதனை பறிக்கும் வேளையில் கூற வேண்டிய ஸ்லோகமாவது:

"துளஸி அம்ருத ஸ்ம்பூதே ஸதா
த்வம் கேசவப்ரியா
கேசவார்த்தம் லுநரமி த்வாம் வரதா
பவ சோபனே"

ஆனால் துளசி பத்திரத்தை வருடப் பிறப்பு, அமாவாசை, பௌர்ணமி, துவாதசி, பிரதோஷம், செவ்வாய் கிழமை, வெள்ளிக்கிழமை ஆகிய நாட்களிலும், மாலை (சந்தி) வேளையிலும், இரவு நேரத்திலும் பறிப்பது உகந்தல்ல. முடிந்தளவு பிரம்ம முகூர்த்த வேளை என்று சொல்லக்கூடிய, விடிவதற்கு காலை ஆறு மணிக்குள் பறிப்பது நல்லது.

துளசியும், மருத்துவ குணமும் :

சாதாரணமாக எல்லா துளசி வகைகளும் நல்லதாகும். ஒருவித நல்ல மணமும், சுவையில் சற்று காரமும் உள்ளது. நம் நாட்டின் தட்ப வெப்பத்திற்கு ஏற்ப வளர மிகவும் இது ஏதுவாகவும் உள்ளது.

பொதுவாக இதனை கோவில்களிலும், கோவில் நந்தவனங்களிலும், இல்லங்களிலும் பாதுகாத்துத் தான் வளர்க்கின்றனர். இது ஓர் சிறந்த மூலிகையாக உள்ளது. காரணம் இது மனிதனின் பல நோய்களுக்கு மருந்தாகும். இதை மனதில் கொண்டு வைணவ திருத்தலங்களில் பிரசாதமாக கொடுக்கின்றார்கள். மேலும் தீர்த்தத்தில் துளசியுடன், பச்சை கற்பூரம், ஏலக்காய், கலந்து தருகிறார்கள். இதனை உண்பதால் உடலுக்கு ஏற்படும் பல பலன்களில் சிலவற்றைப் பார்ப்போம். சம அளவு கற்கண்டுடன் சேர்த்து உண்ண இருதயம், ஈரல், இரைப்பை ஆகியவற்றின் செயல் பாட்டிற்கு மிகவும் நல்லதாகும். மற்றும் இரத்தத்திலுள்ள விஷத் தன்மைகளையும், நச்சுக் கிருமிகளையும் நீக்கி, இரத்த சுத்தியளிக்கிறது. குறிப்பாக பெண்களுக்கு சூதக நோய்கள், மாத விலக்கு சம்மந்த உபாதைகளையும் போக்க வல்லது. இதர வாயு சம்மந்தமான நோய்களுக்கு துளசியுடன் இஞ்சியையும் சாறு எடுத்து சேர்த்துண்ண வேண்டும். சளி, கபம் இவைகளையும் சாதாரணமாக குணப்படுத்தும். குறிப்பாக குழந்தைகளின் சளிக்கு உடன் குணமளிக்க வேண்டி துளசி சாற்றுடன் வெற்றிலை, தூதுவளை, ஓமவல்லி, மொசு மொசுக்கை சாறுகளையும் சற்று சேர்த்து கொடுத்தல் மரபு. இவ்வாறாக, "வலிமை பொருந்திய துளசியின் சாறே பித்த வியாதிகளையும், சேத்துமத்தின் நச்சுத் தீமைகளையும் நீக்குகின்ற சக்தி வாய்ந்தது" என தேரையர் சித்தரே குறிப்பிட்டுள்ளார்கள்.

சமீபத்தில் இந்திய உணவு மற்றும் சத்துணவு பிரிவு கல்லூரி ஆராய்ச்சியாளர்கள் துளசியை உட்கொண்டால் நீரழிவு நோயின் கொடூரம் படிப்படியாக குறைந்து கட்டுப்படும் எனவும், அது மேலும் இரத்தத்திலுள்ள சர்க்கரையின் அளவையும் குறைக்கிறதுஎன்றும் கண்டுபிடித்துள்ளனர். இப்படித் துளசி பல நோய்களுக்கு மருந்தாகுகிறது.

முடிவுரை :

துளசியின் பல பெருமையான வல்லமையும், அருங்குணத்தை இப்படிக் கூறிக்கொண்டே போகலாம். இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் வைணவ திருத்தலத்தினில் பிரசாதமாக தந்து சேவார்த்திகளுக்கு அதனை நோய் தீர்க்கும் மருந்தாக மறைமுகமாக தர நம் முன்னோர்கள் வழி வகுத்துள்ளார்கள். அதனையே கடைபிடிப்பதால் நமக்கே நன்மை என்பது விளங்கும். துளசியை பிரசாதமாக பெற்று உடன் எடுத்துச் செல்லும் பொழுது (துளசி பத்திரம் வாடி சருகாக ஆனாலும்) அதன் புனிதமும் கெடாது. மேலும் அவர்களுக்கு துணையாகவும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இருப்பார் என்பது ஐதீகம் ஆகவே பரந்தாமனின் திருத்துழாயினைஇல்லங்களில் இனிபேணிக் காப்பதுடன் அவற்றைப் போற்றுவதால் பெரும்பயனைப் பெறுவோம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

கமலவேணி தனபதி,
திருவெறும்பூர்.



# சீர் மல்கும் வேங்கடவன்

(வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா)

கருவேழம் பிடிகளுக்குக் கனிதந்து விளையாட
கருநீல மயிலினங்கள் களியாட்டந் தான்போட
தருக்கிளைகள் தழைந்தசைய குரங்கெல்லாம் குதித்தோட
பெருகிவரும் கடலனைய பக்தரெலாம் புடைசூழ
கருமேகம் தழுவவரும் திருமலையில் சீரிடத்தில்
இருள்நீக்கும் பரம்பொருளாய் இடங்கொண்ட வேங்கடவா! (தரவு)

பெருகின்ற அருஞ்செல்வம் தருகின்ற சுகமேபோல்
வருகின்ற வினைத்தீமை உடைகின்ற நிலையேபோல்
தெரிகின்ற மனச்சோர்வு தடமின்றிப் போனதுபோல்
சரிகின்ற பெருவாழ்வு சிறந்ததேதான் ஆனதுபோல்
திருமலையில் திருவடிவாய் திருநின்றாய் நீதானோ?

கலையினுக்கு அழகுதரும் கலைமகளின் கனிவேபோல்
தலையினுக்கு அழகுதரும் தெரிவையரின் குழலேபோல்
அலையினுக்கு அழகுதரும் அருங்கடலின் விரிவேபோல்
மலையினுக்கு அழகுதரும் மழைத்துளியின் வரவேபோல்
சிலையினுக்கு அழகுதர திருநின்றாய் நீதானோ

குறையுணர்வு கொண்டோர்க்கு நிறையுணர்வு தானளித்து
மறையுணர்வு வைத்தோர்க்கு மனவுணர்வில் சீரளித்துக்
கறையுணர்வு பெற்றோர்க்குச் சிறையுணர்வு சென்றளித்து
இறையுணர்வு இல்லார்க்கு இருப்பிடத்தைக் காட்டிடவே
உறைவிடமாய் திருமலையில் திருநின்றாய் நீதானோ?

(தாழிசைகள்)

அறமும் பொருளும்அகமும் புறமும் அழகாய்த்தழைத்திடும் உன்னால்;
நறவும் கனியும் சேர்ந்தாற் போல நன்றே நிகழ்ந்திடும் உன்னால்;
உறவும் பெறவும் உள்ளம் புகுந்து உவகை தந்திடும் உன்னால்;
பிறவும் பேரும் பொலிந்தே எதுவும் பொன்னாய் மாறிடும் உன்னால்!

(அராகம்)

விண்ணவரில் முன்னவனாய் வேங்கடத்தில் வந்துதித்து
கண்மணியாய் நின்றவுனைக் காதலொடு போற்றிடுவோம்;
எண்ணமெலாம் திண்ணமென ஏழுமலை அவதரித்த
வண்ணமலர் வேதவனை வாயார வாழ்த்திடுவோம்; (பேரெண்)

சினந்தோரின் சினத்துள்ளே சிரிடபாக முகிழ்ப்பவனே!
மனப்போரின் களத்துள்ளே முடிவாக உதிப்பவனே!
நினைப்போரின் மனத்துள்ளே நிழலாக இருப்பவனே!
தினந்தோறும் திருக்காட்சி தவறாது அளிப்பவனே! (அளவெண்)

உருவில்லோர் திருவானாய் போற்றி!
திருநாட்டின் வளமானாய் போற்றி!
வளநாட்டின் வாழ்வானாய் போற்றி!
வாழ்வோரின் உயிரானாய் போற்றி!
உயிருக்கோர் உணர்வானாய் போற்றி!
உணர்த்திடவே அவதரித்தாய் போற்றி!
அவதாரம் பத்தெடுத்தாய் போற்றி!
அவனிக்கோர் அணியானாய் போற்றி! (இடையெண்)

ஒளி வீசும் கண்வாழி!
விழிபேசும் முகம்வாழி!
அதரத்து நகைவாழி!
இதயத்து நலன்வாழி!
செவ்வியநற் கரம்வாழி!
சேவடியின் சீர்வாழி!
நளிர்முத்து மணிவாழி!
ஒளிர்பதக்கம் தான்வாழி!
தோள்கண்ட கழல்வாழி!
நீள்மாலை நனிவாழி!
உறையும்வுன் தளிவாழி!
நிறைவான துதி வாழி!
எழில்கொஞ்சும் மலைவாழி!
ஏரார்ந்த படிவாழி!
பெருமாளே நீவாழி!
பேரருளே தான்வாழி! (சிற்றெண்)

வேங்கடவா!

(தனிச்சொல்)

இத்துணைச் சிறப்பும் ஏற்புடன் கொண்ட
சத்திய தேவனே! வித்தக நாதனே!
இத்தரை நிலவுமுன் ஏற்புடைக் காட்சியை
எத்தரை மீதிலும் கண்டோம் இலையே! (ஆசிரிய சுரிதகம்)

---

(டி. வி. நரசிம்மன்)
சென்னை.

# இரு பெரு மலை தத்துவம்

சமயங்கள் - வழிபாடுகள் பல இருந்தாலும், அதில் காட்டப்பட்டுள்ள தத்துவங்கள் ஒரே கருத்து உள்ளவைகளாகவே இருக்கும்.

ஆன்மீகப் பெரியோர்கள் பல தத்துவங்களை நீதிக்கதைகள் மூலம் எடுத்துக் காட்டியிருப்பார்கள்.

ஆடை - அணிகலன்கள் போன்றவைகள்கூட தத்துவ விளக்கத்திற்கு ஆணி வேர்கள்.

சில அரிய பெரிய செயல்களை - தத்துவ வரிசையில் மிகவும் எளிதாக எடுத்துக்காட்டி விடுவார்கள்.

தத்துவ விளக்கங்கள் - அதற்குரிய செயல் முறைகள் யாவும் மனித குலத்தின் முன்னேற்றத்திற்கு ஆதாரமாக அமைந்தவைகளாகும்.

இந்த வரிசையில்-முருகன்-அய்யப்பன் போன்ற இரு பெரு அம்சங்களை நம் ஆன்றோர்கள் எப்படியெல்லாம் எடுத்துக் காட்டியுள்ளார்கள் என்பதனைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

கார்த்திகை மாதம் பிறந்து விட்டால் பாரததேசத்தில் பக்தர்கள் நீல நிறம், கருமை நிறம், பச்சை நிறம் போன்ற வஸ்திரங்களையும், கழுத்து நிறைய பலவித மணிமாலைகளையும் - நல்லநாள் பார்த்துத் தரித்துக் கொண்டு விடுகிறார்கள்.

மார்கழி மாதத்திலே மண்டல பூஜைகளை மனம் குளிரச் செய்து பக்குவமான பிரசாதங்களை பக்தர்களுக்கு அன்போடு அளிக்கிறார்கள்.

தை மாதத்திலே - தத்துவத் தலைவர்களை தரிசித்து விட்டு, தங்கள் தங்களது விரதங்களை முடித்து விடுகிறார்கள்.

பழனி மலை - சபரி மலை இக்கட்டுரைக்கேற்ற இருபெரு தத்துவ விளக்கமாகும்.

பக்தர்களது கனவுகளை நிறைவேற்ற, "பொய்கையிலே" சரவணனாக - திருமுருகன் திருவவதாரம் செய்தான்.

பம்பா நதியிலே - பக்தர்களின் மாயதனைப் போக்க மணிகண்டனாக அய்யப்பன் அவதரித்தான்.

பழனியிலே குமரனாக, ஒரு பழத்தின் காரணம் கொண்டு - பழனியப்பனாக—முருகன் தங்கிவிட்டான்.

சபரியிலே, பாலகனாக புலிப்பால் கொண்டு வரும் நோக்கத்துடன், அய்யன் அய்யப்பன் அமர்ந்து விட்டான்.

மயிலை வாகனமாகக் கொண்டு மலை முழுவதும் சுற்றி வந்தான், மயில் வாகனான முருகன்.

புலிமேல் அமர்ந்து கொண்டு - புன்னகை சிரிப்புடன் காடு, மலை என்று சுற்றித்திரிந்தான்.

கையில் வீரவேல் ஏந்தி வெற்றி வேல் வீரனாக எப்போதும் காட்சியளித்தான்.

வில்லாளி வீரனாக - வில் பிடித்த வீரனாக சபரிகிரி நாதன் - சபரிமலையில் பக்தர்கள் முன் நின்றான்.

வீரவாகு என்ற உத்தமத் தோழனைப் பெற்றான்.

வாவர் என்ற அன்புத் தோழனைப் பெற்றான் அய்யப்பன்.

சூரன் என்ற கொடிய அரக்கனைத் தக்க சமயத்தில் தண்டித்துக் கொன்றவன் சூரசம்ஹாரமூர்த்தியான முருகன்.

மலையில் சுற்றித்திரிந்த மகிஷியை மணிகண்டன் மக்கள் நலம் பெறும் பொருட்டுக் கொன்றான்.

முருகன் இருவர் கரம் பிடித்து புன்னகை புரிந்தான்.

அய்யப்பனோ பிரம்மச்சாரியாகவே அமர்ந்து விட்டான்.

அறுபடை வீட்டிற்கு அதிபதியாக ஆறுமுகன் வந்தான்.

ஐந்து மலைக்கு அரசனாக ஐயப்பன் வந்து சேர்ந்தான்.

பல படிகளைக் கொண்டுள்ள மலை மேல் அமர்ந்தான் முருகன்.

பதினெட்டு படிகளை மட்டும் கொண்டு - ஒரு தனி மலையில் நித்ய வாசம் செய்பவன் சபரிகிரி சாஸ்தா.

பழனியிலே பால் அபிஷேகத்தை கண்டருளுபவன் திருமுருகன்.

சபரியிலே நெய் அபிஷேகத்தைப் பெற்றவன் அய்யன் அய்யப்பன்.

சரவண மந்திரத்தை ஜபித்து - முருகனை முருக பக்தர்கள் அன்போடு வழிபடுகிறார்கள்.

திரு. எம். எஸ். பிச்சுமணி,
சென்னை-56.

சரண கோஷத்தை உள்ளன்போடு சொல்லி, அய்யன் அய்யப்பனை - அடியவர்கள் அனுதினமும் வழிபட்டு வருகிறார்கள்.

முருக பக்தர்கள், காவடி எடுத்து மலை மேல் பல படிக்கட்டுகளைக் கடந்து - கந்தனைக் கண்குளிர கண்டு தரிசிக்கிறார்கள்.

அய்யப்ப பக்தர்கள் இருமுடி தாங்கி, பதினெட்டுப் படிகளைக் கடந்து, அய்யன் அய்யப்பனைக் கண்டு உள்ளம் மகிழ்கிறார்கள்.

கார்த்திகை மாதத்திலே - கார்த்திகேயனுக்கு தீபப் பெருவிழாவை நடத்தி - பக்திப் பரவசத்தில் பக்தர்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கிறார்கள்.

தை மாதத்திலே மகரதீபம் கண்டு மணிகண்டனை அய்யப்ப பக்தர்கள் அன்போடு வழிபடுகிறார்கள்.

இப்படியாக இரு வகை பக்தர்கள் இருபெரு வழிகளில் - இரு வகையான தத்துவங்களை நமக்கு அவ்வப்போது எடுத்துக்காட்டி வருகிறார்கள்.



(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வனான பகவான், 'அப்படியானால் உனக்காக நான் யாசித்து வாங்கிக் கொடுக்கிறேன்' என்று அருளினான் என்பர் பெரியோர். இதைவிட உயர்ந்த குணம் உண்டோ?

'செய்த கூத்துக்கள் கண்டுமே' என்ற விடத்து வ்யாக்யானம் மிகவும் ரஸித்து அநுபவிக்கத் தக்கதாகை யால் அப்படியே இங்குக் கொடுக்கப் படுகிறது. 'அன்றே பிறந்து அன்றே வளர்ந்து அன்றே பிக்ஷையில் அதி கரித்து, மஹாபலி யஜ்ஞவாடத்தள வும் செல்ல, பூமி நெளியும்படிபதறி நடந்து சென்று புக்கு, க்ருஷ்ணா ஜினமும் யஜ்ஞோப வீதமும் முஞ்சி யுமான விநீத வேஷத்துடனே நின்று 'கொள்வன் நான்' என்றாப் போலே சொன்ன முக்த (मुग्ध) ஜல்பிதங் களும், சிறு காலைக் காட்டிப் பெரிய காலாலே அளந்ததுமாகிற இவ்யா பாரங்களடங்கலும் இவர்க்குவல்லார் ஆடினாப் போலே இருக்கிறபடி'.

கண்டும் தெளிந்தும் கற்றார் கண்
ணற் காளன்றியாவரோ?
வண்டுண்மலர்த் தொங்கல் மார்க்
கண்டேயனுக்கு வாழுநாள்
இண்டைச் சடைமுடி ஈசனுடன்
கொண்டு உசாச்செல்ல
கொண்டங்குத் தன்னொடும் கொண்டு
உடன் சென்றதுணர்ந்துமே.

வண்டுகள் மதுபானம் பண்ணுகிற பூமாலையையுடைய பாலகனான மார்க்கண்டேயனின் ஆயுளுக்காக, அடர்ந்த ஜடாமண்டலத்தையுடைய சிவபிரான் தன்னோடு அவனை பேசிக்கொண்டேஅழைத்துக்கொண்டு போய் எம்பெருமானிடம் செல்ல, தாமஸ தேவதையால் அழைத்து வரப் பட்ட போதிலும் அவனைக் காத்து அவனுக்கு ஸாயுஜ்யமும் கொடுத் தருளியபடியை புராணாதி முகத்தாலே அறிந்தும், மனதால் கண்டும், புத்தி யால் தெளிந்தும் கற்பவர்கள் கண்ண பிரானுக்கல்லது வேறொருவர்க்கு அடிமை யாவரோ? என்றபடி.

தன்னை ஆச்ரயித்த இந்திரனுக்குக் கார்யம் செய்தது ஒரு பெருமையோ? வேறு தேவதையை ஆச்ரயித்த மார்க்கண்டேயனையும் காப்பாற்றிய தன்றோ ஏற்றம் என்கிறார்.

சில புராணங்களில் மேல்வாரி யாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனைக் காப்பாற்றிய தாகத் தோன்றும். உண்மையோ என்றால் 'சிவபிரான் மார்க்கண்டே யனை அழைத்துக் கொண்டு போய் எம்பெருமானை ப்ரார்த்திக்க, அவனே காப்பாற்றினான் என்பதாம். இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன. மஹா பாரதத்தில் மார்க்கண்டேயன் தானே தனது வ்ருத்தாந்தத்தை தர்ம புத்ரருக்கு உரைக்குமிடத்தில், நாரா யணனுடைய வாக்யம் இவ்விதமுள் ளது. पितृभक्तोऽसि विप्रर्षे मां चैव शरणं गत। 'ப்ராஹ்மண ச்ரேஷ்டரே, நீர் பித்ரு பக்தராயிருப்பதோடு என்னையும் சரணமடைந்தவராயிருக்கிறீர்' என்று ஸ்ரீமத் பாகவத்திலும் 12ம் ஸ்கந்தத் தில் 8ம் அத்யாயத்தில் आराधयन् हृषीकेशं जिग्ये मृत्युं सुदुर्लभम् ।। 'இந்திரியங் களை அடக்கியாளும் ஹ்ருஷீகேசன் என்னப் பட்ட பகவானை பூஜித்த தின் பயனாக ஜயிப்பதற்கரிதான ம்ருத்யுவையும் வென்றான்' என்று வெகு தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. நம்மாழ்வாரும் 'புக்கடிமையினால் தன்னைக் கண்ட மார்க்கண்டேயன வனை, நக்கபிரானும் அன்று உய்யக் கொண்டது நாராயணன் அருளே' என்று அருளியுள்ளார்.

ருத்ரன் தாமஸ தேவதையாயிருந் தாலும், பிராட்டியின் புருஷகாரமாக (சிபாரிசாக) வந்த ஒரு ஜீவனைப் போலே மார்க்கண்டேயனையும் கைக் கொண்டானே! என்று எம்பெரு மானின் பெருந்தன்மையில் ஆழ்வார் ஆழ்கிறார்.

செல்லவுணர்ந்தவர் செல்வன்தன்
சீரன்றிக்கற்பரோ?
எல்லையிலாத பெருந்தவத்தால் பல
செய்மிறை
அல்லலமரரைச் செய்யும் இரணி
யனாகத்தை
மல்லலரியுருவாய்ச் செய்த மாயம்
அறிந்துமே.

அபரிமிதமான மஹா தபஸ்ஸுக் களாலே பல வகையாகச் செய்யப் பட்ட லோகபீடையையுடையனாய், விசேஷித்து தேவர்களுக்குத் துன்பங் களை உண்டு பண்ணினவனான ஹிரண்யாஸுரன் உடலை, பெரிய நரசிங்க வடிவையுடையவனாய்க் கொண்டு இரு பிளவாகச் செய்து, அசுரச் சிறுவனான ப்ரஹ்லாதனைக் காப்பாற்றியதை யறிந்து வைத்தும், பூர்த்தியான ஜ்ஞானத்தைப் பெற்ற வர்கள் லக்ஷ்மீபதியான அப்பெரு மானுடைய திருக்குணங்களையன்றி வேறொன்றைக் கற்பரோ? என்றபடி.

ருத்ரன் அழைத்து வந்த மார்க் கண்டேயனைக் காப்பாற்றியது ஒரு பெருங்குணமோ? தன் தகப்பனே பகையாய்த் தன்னைக் கொல்ல பல வகைகளிலும் முயன்ற போது, ஓர் அசுரபாலகனை ரக்ஷித்தானே! ஆச்ரித ரக்ஷணத்வத்திலுள்ள த்வரை யினால் நரத்வஸிம்ஹத்வங்களை ஏறிட்டுக்கொண்டு,பிரமன்கொடுத்த ஒரு வரமும் பழுதாகாமல் ப்ரஹ்லா தனைக் காப்பாற்றினானே, இது வன்றோ மஹாகுணம்! 'அங்கு அப் பொழுதே அவன் வீயத்தோன்றிய, என் சிங்கப்பிரான் பெருமை ஆரா யும் சீர்மைத்தே?' (திருவாய்மொழி 2-8-9) என்று ஈடுபட்டதும் காண்க.

மாயமறிபவர் மாயவற் காளன்றி
யாவரோ?
தாயம் செறும் ஒரு நூற்றுவர்மங்க
ஓணவர்க்காய்
தேசமறிய ஓர் சாரதியாய்ச் சென்று
சேனையை
நாசம் செய்திட்டு, நடந்தநல் வார்த்தை
யறிந்துமே.

தாயாதி முறையில் சண்டை செய்து கிளர்ந்த துர்யோதனாதிகள் தொலைய, விலக்ஷணர்களான பஞ்ச

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D.) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

பாண்டவர்களுக்காக, ஆயுதமெடேனென்று ப்ரதிஜ்ஞை செய்து அம்புகளைத் தன் மார்வில் ஏற்று, ஸகல லோக ப்ரஸித்தமாம்படி ஒப்பற்ற ஸாரதியாகப் போய் எல்லாச் சேனைகளையும் அழியச் செய்து, பிறகு தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினான் என்ற நல்வார்த்தையை அறிந்தும், மிகவும் ஆச்சர்யமான பகவத் கதைகளை யறிபவர்கள் அப்பெருமானுக்கல்லது மற்றொருவருக்கு அடிமையாவரோ? என்றபடி.

ந்ருஸிம்ஹாவதாரத்தில் ஓர் உகிராகிலும் (நகமாகிலும்) தன் ரக்ஷணத்துக்கு இருந்தது. க்ருஷ்ணவதாரத்தில் 'ஆயுதமெடேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து வைத்து, அம்புகளையும் அஸ்த்ரங்களையும், பிராட்டி வஸிக்கும்படியான அதிஸுகுமாரமான தனது திருமார்பில் ஏற்றானே, இதுவன்றோ மஹாகுணம்! என்று உருகுகிறார்.

பல வீரர்கள் விட்ட அம்புகளை ஏற்றதல்லாமல், பகதத்தன் என்ற மஹாசூரன் அர்ஜுனனைக் குறித்து ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்த போது, அது அவனைத் தொலைக்காமல் விடாது என்றறிந்து, தான் முன் நின்று அர்ஜுனனை மறைத்துக் கொண்டு, தனது மார்பில் அந்த அஸ்த்ரத்தை ஏற்றுக் கொண்டான் கண்ணபிரான் என்றது இங்கு அறியத்தக்கது.

மேலும், ஸ்வாதந்த்ர்யம் பாரதந்த்ர்யம் ஆகிய உறவுகள் உலகில் மாறினால், பர்த்தா பார்யையின் காலைப் பிடிப்பதைப் போல, அவை ரஹஸ்யத்திலே இருக்கும், பஹிரங்கமாக அல்ல. அங்ஙனன்றியே தன்னை 'இன்னார் தூதனென நின்றான்' என்கிறபடியே பாண்டவ தூதன் என்று ப்ரஸித்தமாக்கியும், पार्थं रथिनमात्मानं च सारथिं सर्वलोकसाक्षिकं चकार என்று பாஷ்யகாரர் ஸ்ரீ கீதா பாஷ்யத்தில் அருளினபடியே, உலகமறிய ஓர் ஸாரதியாய் நின்ற ஸௌலப்யமும் வாசாமகோசரம். இதுவும் இங்கு ஆழ்வார் உள்ளத்தை உருக்குகிறது.

வார்த்தையறிபவர் மாயவற்காளன்றி
யாவரோ?
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்
பொடு இறப்பிவை
பேர்த்து, பெருந்துன்பம் வேரற
நீக்கித் தன் தாளின்கீழ்ச்
சேர்த்து, அவன் செய்யும் சேமத்தை
எண்ணித் தெளிவுற்றே.

கீதையின் சரம ச்லோகமாகிய நல்வார்த்தையறிபவர்கள், ஸ்வரூப விளக்கத்தை மறைக்கின்ற பிறப்பு, வியாதி, கிழத்தனம், மரணம் முதலானவற்றைவிட்டுக் கழியும்படி பண்ணி, பகவானை விட்டுத் தன் ஸ்வரூபத்தை மட்டும் அநுபவிப்பதான கைவல்யமாகிற மஹா அநர்த்தத்திலும் புகாமல் காத்து, தன்னுடைய திருவடியாகிய மோக்ஷத்தைக் கொடுத்து, இப்படியாக அவன் செய்தருளும் க்ஷேமங்களை அநுஸந்தித்துத் தெளிவு பெற்று வைத்து, அப்பெருமானுக்கல்லதுவேறொருவருக்கு அடிமையாவரோ? என்றபடி.

இதுவரை அநுபவித்த குணங்கள் ஒரு தட்டு, இப்போது சொல்லும் குணம் மற்றொரு தட்டு என்னலாம்படியுள்ளது. இதுவரை சொன்னவை, மண் தின்ன வேண்டும் என்று அழும் குழந்தைக்கு அதைக் கொடுத்துப் பிறகு பரிஹாரம் செய்வது போலாம். சரம ச்லோகம் அருளியது, அவர்களுடைய ப்ரியத்தைப் பார்க்காமல் ஹிதத்தையே பார்த்து, ஒருவர் கேட்காமலிருக்கச் செய்தே கேவலம் தன்னுடைய க்ருபையினாலே அர்ஜுனனை வ்யாஜமாகக் கொண்டு, உலகுக்கு அருளிச் செய்த மஹோபகாரம். ஸ்ருஷ்டி தொடக்கமான ஸகல பாபங்களையும் போக்கி மோக்ஷம் அளிக்கிறேன் என்று உறுதி மொழி கூறியதற்கு ஸமம் வேறெதுவுமாகாதன்றோ.

இங்ஙனே நம்மாழ்வார் பிணங்கும் அமரர்களைப் போலன்றித் தம்மில் தாமே பிணங்கி, வால்மீகி பகவானைப் போலே 'தப்பச் சொன்னோம்' என்று தம்மைத் தாமே பலகாலும் திருத்திக் கொண்டு பகவத் குணங்களை அநுபவித்தது எங்கும் காணக் கிடைக்காத ஒரு அதிசயம். இங்கு பாசுரங்களில் ஒன்றுக்கொன்று ஸங்கதியும், ஒரு குணத்தைவிட மற்றொரு குணத்தின் மேன்மையும் பூர்வர்களின் வ்யாக்யானங்களைக் கொண்டே அறிய முடியுமேயன்றி நம் போல்வாருடைய புத்திக்கு எட்டக் கூடியதன்று. ஆகவே அவர்களுக்குத் தலையல்லால் கைம்மாறிலேன் என்று க்ருதஜ்ஞதையுடன் இக்கட்டுரையை முடிக்க ப்ராப்தமாகிறது.



ஸப்தகிரி

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் யாத்திரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்திரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதினை திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி.தே. திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள் :

1) ஹில் வ்யூ பாதிக் குடில்கள், சங்கு மிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) ரூ. 15/-

எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது ரூ. 25/-

எச். வி. சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத் தொகுதி (ஹீட்டர் உள்ளது) ரூ. 25/-

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி. பி. கி. மூன்றாவது வரிசை முதலியன

டி. பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 60/-

வி.வி.சி., எம்.பி.சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) ரூ. 50/-

டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) ரூ. 15/-

ஏ. டி. சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) ரூ. 30/-

ஆர்ஜித சேவை செய்யும் கிருஹஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு.

3) எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றும் என். ஜி. ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் ரூ. 50/-

முன்பதிவு இல்லை.

4) பயணிகள் மாளிகையின் உட்புறக் குடில்கள் ரூ. 70/-

சிறப்பமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச். ஆர். ஜி. குடில்கள் ரூ. 250/-

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடி பவன்

ஒரு அறைத்தொகுதிக்கு ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி 1க்கு ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

முதல் தளத்தில் பெரிய அறைத்தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500-/

ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) ரூ. 500/-

ஸ்ரீநிவாசா நிலையம்
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-
வித்யா சதன்
பெரிய அறைத் தொகுதி ரூ. 750/-
,, மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-
கோதாவரி சதன்
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-
காம்பெல் விருந்தினர் விடுதி
அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-
,, விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித் தலைவர், (வரவேற்பு) தி. தி. தே., திருமலை" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள் :
சங்குமிட்டா குடில்கள் கிழக்கு
எண். 272, 260, 266, 267 ரூ. 100/-
டி.பி. குடில் எண். 71 வரிசை III
எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-
ஆயா குடில், கோகினேனி குடில்
மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-
சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-
ஸ்ரீ சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித் தலைவர், (ஆர்). தி. தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி
சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-
(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள் :-
* ஒரு நாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழங்கப்படும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால், நிர்ணயிக்கப் பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிக்கப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள் :

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப் புறத்தில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தர்மசாலை மற்றும் ஸ்ரீ கோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இட வசதிகள் உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள் :

ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)
சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக் கொண்டது ரூ. 40/-
கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103.

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :
அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-
'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி எண். 20166.

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதியுடன் கூடியது) (சித்தூர் சாலையில் உள்ளது)
பெரிய அறைத் தொகுதி ரூ. 65/- : சிறிய அறைத் தொகுதி ரூ. 40/-
திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103.




வசிட்டரைக் கேட்டார். 'இவற்றால் தீமை ஒன்றும் நேராது. முடிவில் நன்மையே ஏற்படும்' என்று வசிட்டர் கூறியதால் சற்று ஆறுதல் அடைந்தார் தசரதர்.

எதிர்த்திசையில் திடீரென ஒரு ஒளி தோன்றி சேனைவீரர்களின் கண்களை மங்கச் செய்தது. நன்கு உற்றுப் பார்த்ததில் அந்த ஒளி ஒரு மனித உருவம் என்பது புலனாயிற்று. மார்பில் பூணூல் தவழ, வீரிய குணம் கொண்ட பரசுராமர் அவர்கள் முன்னே தோன்றினார்.

ஒரு நல்ல வீரன் என்றால் அவன் இரக்கத்தை முதலில் வெல்ல வேண்டும். இரக்கம் கொள்ளுதல் வீரனின் தகுதியின்மையல்லவா? இரக்கத்தை வென்றவர் பரசுராமர். தந்தை உத்தரவிட்ட மறுகணமே சிறிதும் தயங்காமல் தன்னை ஈன்ற தாயின் தலையையே வெட்டி வீழ்த்தினார். தந்தை கூறியது நியாயமல்ல என்றாலும்கூட 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்ற வாக்கின்படி உடன் அந்த மந்திரத்திற்குக் கட்டுப்பட்டார். பரசுராமர் கோடரியுடன்

# இராமரும் பரசுராமரும்

திரு. க. இராமலிங்கம்,
புதுப்பேட்டை.

அன்பு நிரம்பிய மனங்கொண்ட தசரதர், தமது நான்கு பிள்ளைகளுக்கும் மிதிலையில் திருமணத்தை நல்ல முறையில் முடித்துக்கொண்டு அயோத்திக்குத் திரும்புகிறார். அன்புடையவர் ஊருக்குச் செல்லும் போது மூன்று நாட்கள் உடன்சென்று வழியனுப்புவது அந்நாளைய வழக்கம். அவ்விதம் ஜனகர், தசரதர் தம் நான்கு பிள்ளைகள் மருமகள் மற்றும் உறவினர் யாவரும் உடன் வர படையுடன் சென்றபோது உடன் சென்றார். மூன்று நாள் பயணத்தில் உடனிருந்து மிதிலைக்குத் திரும்பினார்.

தசரதன்வழியில் காற்று பலமாக வீசியது. கரைபுரண்டு வரும் ஆற்று வெள்ளம் அருகிலிருக்கும் பிரதேசங்களைக் குழப்புவதுபோல, காற்று தசரதரன் சேனைகளை அலைக்கழித்துத் துன்புறுத்தியது. பெரிய அபாயம் வருவதற்கு முன் சில கெட்ட சகுனங்கள் தோன்றும். சூரியனைச் சுற்றிலும் பயங்கரமான ஒரு வளையம் தோன்றியது. கழுகுகள் ஆகாயத்தில் வட்டமிட்டன. திசைகளைப் பார்க்க இயலாதவாறு எங்கும் புழுதி நிறைந்தது. நரிகள் ஊளையிட்டன.

கெட்ட சகுனங்களைக் கண்டு தசரதர் மனங்கலங்கினார். தனது குரு

அருகில் வருகின்றதைப் பார்த்து நடுநடுங்கிய தன் தாயைக் கண்டு அவர் இரக்கம் கொள்ளவில்லை. ஜமதக்னி முனிவர் இதனால் பெண்ணைக் கொன்ற பாவத்தை அடைந்தார். அதனால் தண்டனையும் பெற்றார். ஸ்திரீகளைக் கொல்வது பாவம் என்று சாஸ்திரம் சொல்கிறது. அவர் சாஸ்திரத்தை மீறியதால் ஒரு மன்னனால் வெட்டுண்டு மாண்டார்.

பரசுராமர் தாய் செய்த தவறு தான் என்ன?

நீராடச் சென்ற ரேணுகை, மிருத்திகாவதி என்ற நகரின் அரசன்

சித்ரதன் என்பவன்கழுத்தில்தாமரை மலர் மாலையணிந்து மனைவியுடன் ஜலக்ரீடை செய்வதை அறிந்து அத் தகைய இன்பம் பெற விரும்பினார். இத் தகாத எண்ணத்தினால் தனது தூய்மையை ரேணுகை இழந்ததோடு ஜமதக்னி முனிவரின் சாபத்திற்கும் ஆளானாள். தூய்மை இழந்ததை அறிந்து கோபப்பட்ட ஜமதக்னி முனிவர் ருமண்வந்த, ஸுஷேணன், வஸ்து, விச்வாவஸு என்ற தனது நான்கு புத்திரர்களிடமும் ரேணுகையின் தலையை வெட்டும்படி பணித்தார். அவர்கள் மறுத்துவிடுகின்றனர். பரசுராமரிடம் சொன்னவுடன் ரேணுகையின் தலையை வெட்டிவிடுகிறார். அதனால் மகிழ்ந்த ஜமதக்னியிடம் மீண்டும் தன் தாய் உயிர்பெற வேண்டும் என்றும், இதுவரை நடந்ததை மறந்துவிட வேண்டும் என்று பரசுராமர் வரம் கேட்டு அந்த வரங்களையும் பெற்றுவிட்டார்.

அந்த இரக்கமின்மையால் அவரின் வீரம் உலகம் புகழும் வீரமானது. இருபத்தொரு தலைமுறை க்ஷத்ரியர்களைக் கொல்ல மன உறுதிகொண்டார். க்ஷத்திரிய அரசர்களைக் கொன்று பூமி முழுவதையும் தம்முடையதாக்கிக் கொண்டார்.

இரக்க குணம் மிகுந்தவன் கர்ணன் என்ற ஒரே காரணத்திற்காகத்தான் பீஷ்மர் கர்ணனை படைத் தளபதியாக்க அனுமதிக்கவில்லை.

பரசுராமரின் சபதம் தசரதருக்குத் தெரிந்ததால் அவர் மிகவும் அஞ்சினார். தனக்கு வயதாகிவிட்டது பிள்ளைகள் சிறு பிராயத்தினர். க்ஷத்ரியர்களை அழிப்பதாக சபதம் செய்த பரசுராமர் தன் கண்ணெதிரிலேயே தன் பிள்ளைகளைக் கொன்றுவிடுவாரோ என்று அஞ்சினார். ராமர் என்ற பெயர் பயத்தைப் போக்கும் தன்மை கொண்டது. இருப்பினும் பரசுராமர் என்ற பெயர் பயத்தினையே தந்தது.

பரசுராமருக்கு தசரதர் மரியாதை செய்ய விரும்பினார். ஆனால் பரசுராமரோ அவரைக் கவனிக்காமல் நேராக இராமர் இருக்குமிடத்தை அடைந்து அவரை கோபம் பொங்க விழி பிதுங்க பயங்கரமாகப் பார்த்தார். போர் செய்யத் தயார் நிலையில் தனது வில்லை உறுதியாகப் பிடித்து பின்வருமாறு கூறினார்.

“க்ஷத்ரிய ஜாதி எனக்கு அபசாரம் செய்ததால், இருபத்தொரு தலைமுறைகளைக் கொன்று மனவமைதி பெற்றேன். தூங்கிய பாம்பைத் தடியால் அடித்ததுபோல உன்னுடைய பராக்ரமத்தைக்கேட்டு நான் மீண்டும் கோபமடைந்துள்ளேன். என்னால் ஒடுக்கப்பட்ட க்ஷத்ரிய குலம் உன்னால் தலை நிமிருவதை நான் விரும்பவில்லை. உன் வீரத்தால் என் அமைதி குலைந்தது. நீ முறித்தது ஜனகரின் வில் அல்ல. என் கீர்த்தியை. என்னைவிட பராக்ரமசாலி இதுவரை எவரும் தோன்றவில்லை. நீ என்னை தாழ்ந்தவனாகச் செய்துவிட்டாய்.

இதுவரை ராமன் என்ற சொல் என்னை மட்டுமே குறித்து வந்தது. இனி அச்சொல் உன்னை மட்டுமே குறிக்கும் என்று நினைக்கும்போது எனக்கு வெட்கமாக இருக்கிறது. இனி உன் வீரத்தையே உலகம் பேசிக் கொண்டிருக்கும்.

ஆற்றிலுள்ள வெள்ளத்தின் வேகத்தினால் கரையிலுள்ள மரத்தின் வேரறுக்கப்பட்டால் அம்மரத்தைச் சிறு காற்றுகூட தள்ளிவிடும். அதுபோல நீ வளைத்து முறித்த சிவனாரின் வில்லின் பலம் முன்பே போக்கப்பட்டது.

விசுவகர்மன் தயாரித்த இரண்டு வில்களில் ஒன்று விஷ்ணுவிடமும் மற்றொன்று சிவனிடமும் தரப்பட்டன. விஷ்ணுவின் ஹுங்கார சத்தத்தினாலேயே சிவபிரான் வில்லின் சக்தி குறைந்துவிட்டது.

சிவபிரான் அவ்வில்லினால் தக்ஷணை சம்ஹாரம் செய்தார். திரிபுர ஸம்ஹாரம் செய்தார். பலம் இழந்த வில்லைத்தான் ஜனகரின் முன்னோரான தேவராதனிடம் கொடுத்தார்.

விஷ்ணு தனது வில்லை எனது பாட்டனார் ரிசீக முனிவரிடம் தந்தார். இப்போது என் கையில் அது இருக்கிறது. இந்த வில்லில் நீ நாண் ஏற்றிவிட்டால் எனக்குச் சமமான பலம் உள்ளனவாக உன்னை ஒப்புக் கொள்வேன்.

அல்லது என் கோடரியின் முனைக்கு நீ பயந்துவிட்டால் எனக்கு அஞ்சலி செய்து, ஒதுங்கிக்கொள்.”

இவ்வளவையும் பரசுராமர் கூறியும் இராமர் பதிலேதும் கூறாமல் பரசுராமரிடமிருந்து வில்லினை வாங்குவதே தக்க பதில் என்று கருதி புன்னகையுடன் அவ்வில்லினைக் கையில் எடுத்தார். அந்தப் புன்னகையின் மூலம் இராமர் கோபத்தைக் காட்டியதோடு பரசுராமரின் தற்புகழ்ச்சியையும் அவமதித்துவிட்டார்.

மகாவிஷ்ணுவின் வில்தான் இதுவரை பரசுராமரிடம் இருந்தது. இப்போது அது மகாவிஷ்ணுவின் அம்ஸமான இராமபிரானிடம் வந்ததும் பொறுத்தமாக இருந்தது. அந்த வில்லுடன் இராமர் அழகாக இருந்தாராம்.

இராமர் சிரமம் ஏதுமின்றி நாண் ஏற்றியும் இதுவரை சூரியனைப்போல் ஒளியுடன் இருந்த பரசுராமர், ஒளியற்ற புகை மாத்திரமே மிச்சமுடைய அக்னிபோல் காணப்பட்டார். வெற்றியின் காரணமாக இராமனின் ஒளி கூடியது. பௌர்ணமியன்று மாலையில் தோன்றும் சந்திரன்போல இராமபிரானும், மேல் திசையில் ஒளியிழந்து அஸ்தமிக்கின்ற சூரியன்போல் பரசுராமரும் இருந்தனர்.

வில்லில் ஏற்றப்பட்டபாணத்திற்கு ஓர் இலக்கு தேவைப்படுகிறது. இராமர் பரசுராமரிடம் இலக்கினை வேண்டி ஒரு பார்வை பார்க்கிறார்.

பரசுராமரோ மௌனம்சாதிக்கிறார். தோல்வி அவரைத் துவளச்செய்து பேச்சிழக்கச் செய்துவிட்டது. இராமர் வெற்றிபெறுவார் என்று நம்பவே யில்லை.

இதுவரை பேசாமல் இருந்த இராமர், "நீர் என்னை எதிர்த்தவரே ஆனாலும் பிராமணராக இருப்பதால் கடுமையாகத் தண்டிக்காமல் விட்டு விடுகிறேன். யோக சக்தியால் எங்கும் செல்லத் திறமை பெற்றுள்ள உமது ஸஞ்சார சக்தியை அழித்துவிடட்டுமா? அல்லது சுவர்க்கத்தை விரும்பி யாகங்களால் நீர் சம்பாதித்து வைத்திருக்கும் புண்ணியங்களை அழித்து விடட்டுமா?" என்று கேட்டார்.

ப்ருகு முனிவர் வம்சத்தில் விசுவாமித்திர முனிவரின் சகோதரி கௌசிகையின் புத்திரரான ஜமதக்னி முனிவருக்கும் ரேணு என்ற அரசரின் மகளான ரேணுகாதேவிக்கும் பிறந்தவர் தான் பரசுராமர். தாய் க்ஷத்ரியப் பெண். தந்தை பிராமணர்.

பரசுராமர் யோக சக்தியால் நினைத்த மாத்திரத்தில் நினைத்த இடத்திற்குச் செல்லும் சக்தி பெற்றவர்.

பரசுராமருக்கு புண்ணியம் எப்படி சேர்ந்திருக்கும்?

பரசுராமர் க்ஷத்ரியர்களை எல்லாம் வென்று பூமி முழுவதையும் தனக்குரியதாக்கிக் கொண்டார். அவர் செய்தஒரு யாகத்தில் தக்ஷிணையாக தான் வென்ற பூமி முழுவதையும் கச்யபர் என்ற முனிவருக்குத் தாரைவார்த்துக் கொடுத்துவிட்டார். தானம் பெற்ற கச்யபர், அவரை தனக்குச் சொந்தமான நிலத்தைவிட்டுச் செல்ல வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். தானம் செய்தபின் அந்நிலத்தில் தங்குவது தகாதாகையால் பரசுராமர் ஸஹ்ய மலைக்கு வந்தார். அந்த மலையின் அடிவாரம் வரை கடல் பரந்திருந்தது. சமுத்ரராஜனிடம் தனக்குக் கொஞ்சம் இடம் தரும்படி பரசுராமர் கேட்டார். கோடரியை கடலில் எவ்வளவு தூரம்வீசமுடியுமோஅவ்வளவு தூரத்திற்குக் கடலை உள்ளே இழுத்துக் கொண்டு பரசுராமர் வசிக்கத் தக்க இடம் தருவதாக சமுத்திரராஜன் சொன்னார். அதன்படி பரசுராமர் தனது கோடரியை வீசினார். கோடரி வெகு தூரம் போய்விழ, அவ்வளவு தூரம் கடல் உள்ளே போய்விட்டது. பரசுராமர் வசித்த அந்த இடத்திற்குத்தான் பரசுராம க்ஷேத்ரம் என்று பெயர். அது தற்போது கேரளாவில் உள்ளது.

பல யாகங்கள் செய்தும் பூமியைத் தானமாகக் கொடுத்தும் நிறைய புண்ணியத்தைச் சேர்த்து வைத்திருந்தார் பரசுராமர். அந்த புண்ணியம் யாவற்றையும் அழித்துவிடட்டுமா என்று இராமபிரான் கேட்டார்.

அந்தக் கேள்வியிலேயே பரசுராமரின் கர்வம் அழிந்துவிடுகிறது. ஆனால் பரசுராமர் வேண்டுமென்றே தான் இப்படி செய்திருக்கிறார் என்பது பற்றி அவரே இராமபிரானிடம் சொல்கிறார்;

"உம்மை நான் அறியாதவனல்ல. பரமபுருஷனான உமது பராக்ரமத்தை இவ்வுலகம் காண வேண்டியே நான் உமக்கு கோபம் வரும்படி செய்தேன். கோபமுண்டாக்கப்பட்டாலன்றி ஒரு வீரனின் முழு பலமும் வெளிப்படுவதில்லை. உங்களுக்குச் சொந்தமான வில்லை (விஷ்ணுவின் வில்) நீங்கள் வளைப்பதைக் காண நான் ஆசைப்பட்டேன். நான் கோபமூட்டாவிட்டால் என் வில்லை நீங்கள் கையில் வாங்கியிருக்கமாட்டீர்கள். வளைத்து நாணேற்றியிருக்கமாட்டீர்கள். எனது தந்தையின் பகைவர்களை முற்றும் சாம்பலாக்கினேன். பூமியை முனிவருக்கு தானம் செய்தேன். பராக்ரமமும் கொடைக் குணமும் உடைய எனக்கு உங்களால் வந்த தோல்வி பெருமையளிப்பதே. தோல்வியுறுவதுதான் எனக்கு இப்போது வெற்றி! இதில் எனக்கு சந்தோஷம்தான்.

என் எண்ணம் அறிந்து இரண்டில் ஒன்றினை அழிப்பதாகச் சொல்வதில் உங்களின் பரந்த உள்ளத்தைப்புரிந்து கொண்டேன். புண்ணிய தீர்த்தங்களுக்குச் செல்வதற்குமட்டுமே நான் ஸஞ்சாரத்தன்மையைப் பயன்படுத்துகிறேன். அழிக்கப்பட்ட ஸ்வர்க்கத்தின் மார்க்கமானது சுகத்தில்பற்றற்ற என்னை வருத்தாது. அதனால் என் புண்ணியம் அனைத்தையும் நீங்கள் அழிப்பதுபற்றி எனக்கு வருத்தமில்லை" என்றார்.

பரசுராமரின் புண்ணியங்களை பாணம் மூலம் அழித்த இராமர் அந்த முனிவரின் பாதங்களைத் தொட்டு வணங்கினார். கர்வம் நீங்கிய நிலையில் பரசுராமர் ராமரால் வணங்கத் தகுதியுடையவர் ஆகிவிடுகிறார்.

பரசுராமர் மேலும் சொல்கிறார்:

"நீங்கள் எனக்கு அளித்த தண்டனை மூலம் நான் விரும்பாத ஸ்வர்க்கமே எனக்கு இல்லாது போயிற்று. தண்டனையால் ஏற்பட்ட நன்மை இது. என் தாயிடமிருந்து நான் பெற்ற ராஜஸ குணம் இதுவரை என்னை ஆட்சி செய்து வந்தது. உங்களின் தண்டனையால் அந்த ராஜஸ குணம் முற்றும் நீங்கி எனது தந்தையின் ஸத்வ குணத்தை நான் அடையச் செய்துவிட்டது. எனவே உங்களின் தண்டனை எனக்கு அநுக்ரஹம் ஆகிவிட்டது. என்னிடம் மன்னிப்பைக் கோர வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. தேவர்களின் காரியத்தைச் செய்யப்போகிற உங்களுக்கு யாதொரு தடையும் உண்டாகாது" என்று கூறி பரசுராமர் எல்லோரிடமும் விடைபெற்றார்.

அவர் சென்றதும் தசரதர் இராமபிரானைக் கட்டிக்கொண்டார். இராமர் இறந்துவிடுவார் என்றே நினைத்திருந்த தசரதருக்கு இராமர் புனர்ஜென்மம் எடுத்துள்ளதாக நினைத்து மகிழ்ந்தார்.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மாமேருபஞ்ச லோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) 5×5 செ. மீ. 500-00 6½×6½ செ. மீ. | ரூ. 750/- |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் (கோல்ட் பிரேம்) | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும்,எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபிட்சத்தைஉண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீசாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ மகாசுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) மேற்கண்ட பலனை தரவல்லது | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 9. | சர்வ சித்தி யந்த்ரம் விமானம் முதல் கார்கள் வரை ஏற்படும் விபத்துக்களைத் தடுத்துக் காக்க வல்லது | 500-00 |
| 10. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 11. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 13. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 14. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 15. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 16. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள் கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 17. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகள நீக்கி விபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்ற வல்லது | 80-00 |
| 18. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கிக் காப்பாற்ற வல்லது | 150-00 |
| 19. | பூஜைக்கு உரிய பஞ்சாயதன செட்டும், பாணலிங்கம், ஸ்படிக லிங்கமும் பலவிதமான மாலைகள் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டவையும் இன்னும் பலவிதமான சாதனங்களும் கிடைக்கும் பூஜைக்குரிய பாதுகை இங்குக் கிடைக்கும். | |
| 20. | துளசி மணி மாலை ரூ. 150/- ருத்ராட்ச மாலை ரூ. 350/- ஸ்படிக மணி மாலை ரூ. 300/- தாமரைமணி மாலை ரூ. 200/- (ஒவ்வொரு மாலையும் 54 மணிகள் கொண்டு சுத்த வெள்ளியில் வெள்ளி கவசத்துடன் கட்டியது. | |

விபரங்களுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :


**ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்**

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்),
கோபாலபுரம், சென்னை - 600086.

**ஸ்வாமிஜி முருக பூஷணம்**

ஸ்ரீ வித்யா உபாசகர் - டிரஸ்டு,
ஸ்ரீ மாமேரு டிரஸ்ட் நெ. 72 கௌடியா மடம் ரோடு,
சென்னை - 600014 போன் : 861254,

**போன் : கடை : 472013 மா மேரு டிரஸ்டு வீடு: 861254**


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# ஸ்ரீ ராமாயணத்தில் ஸுக்ரீவ சரணாகதி

திரு. எஸ். கே. ராமானுஜாசாரி - சென்னை-32.

"கீரிப்பங்காட்டில் (மன்னார் குடி அருகில்) தோன்றி தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் பல்லாயிரக்கணக்கான உபந்யாஸங்களை நிகழ்த்திப் பெயர் பெற்றவர் ஸ்ரீ உ. வே. வித்வான் வேங்கடாசாரியார் ஸ்வாமி. ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அவசியம் அறிய வேண்டிய அர்த்தங்கள் என்று கூறப்பெறும் அர்த்த பஞ்சகத்தை உள்ளத்தில் கொண்டு 'ஸ்ரீராமாயணஸாரம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

இந்நூலிலிருந்து ஸுக்ரீவ சரணாகதியைப்பற்றிய ஓர் உண்மையை மிக அழகாக தனக்கே உரிய பாணியில் எழுதியுள்ளதை நம் வாசகர்கள் படித்துப் பயனடைய அதனை கீழே எழுதியுள்ளேன்.

ஸுக்ரீவ சரணாகதியில் ஒரு உண்மை என்னவென்றால், "ஒரு சேதனன் எம்பெருமானை முறை தழுவாது பற்றியிருப்பினும் தான் கோரின பயனைப் பெறும் போது அவன் அடியார் திறத்து அபராதம் சிறிதும் இல்லாது இருத்தல் இன்றியமையாததாகும். இவ்வாறு அபராதம் பெற்றிருப்பின், பயனைப் பெற இயலாது. சரணாகதி தருமத்தைத் தாம் உணரும் போது பரமனடியார்திறத்து அபராதம் சிறிதும் இன்றியிருத்தல் ஓர் மறை" என்பதையும் உணர வேண்டும்.

இவ்வுண்மைக் கருத்தை மனத்தில் கொண்டு ஸுக்ரீவன் வரலாற்றை ஆராய்தல் வேண்டும். ஸுக்ரீவன் இராமபிரானிடத்து மிக்க அன்புள்ளவன் என்பது மெய்யே. ஆயினும் இலக்குமணனிடம் எங்ஙனம் அன்பு காட்டுதல் வேண்டுமோ, அங்ஙனம் காட்டினானில்லை: இராமபிரானும் ஸுக்ரீவனும் அக்னி சாட்சியாய்த் தோழமை கொண்டபின், ஸுக்ரீவன் இலையும் பூவும் நிரம்பியிருக்கும் ஒரு மரத்தின்கிளையை ஒடித்து, பூமியின் மேலேபோட்டு, அதின் மேலே இராமபிரானுடன் உட்கார்ந்து கொண்டு அப்பெருமானிடம் தன் குறையைப் போக்குமாறு வேண்டிக்கொள்கிறான். இவ்வாறு ஸுக்ரீவனும் இராமபிரானும் இலையும் பூவும் நிரம்பியிருக்கும் கிளையில் பல சமயங்களில் உட்கார்ந்து ஒருவருடன் ஒருவர் பேசிக்கொண்டிருந்ததாய் சரிதத்தில் கூறப்பெற்றிருக்கிறது. ஆனால் ஒரு ஸமயமாவது இலக்குமணனை சுக்ரீவன் இவ்வாறு ஆஸனம் கொடுத்து உபசரித்ததாய் இராமாயணத்தில்கூறப்பெற்றிலது.

[இங்கு,

ததः ஸ பர்ணபஹுளாம்<br>
சித்வா சாகாம் ஸுபுஷ்பிதாம் |<br>
ஸாலஸ்யாஸ்திர்ய ஸுக்ரீவ:<br>
நிஷஸாத ஸராகவ: ||<br>
லக்ஷ்மணாயாத: ஸம்ஹ்ருஷ்ட:<br>
ஹநுமான் ப்லவகர்ஷப: |<br>
சாகாம் சந்தன வ்ருக்ஷஸ்ய<br>
ததௌ பரம புஷ்பிதாம் ||

என்பன காணத்தக்கன.]

ஸுக்ரீவனுடைய இச்செயலைக் காணுங்கால் "இலக்குமணனிடம் அன்பில்லை; அபராதம் உண்டு" என்பது நன்கு விளங்குகின்றதன்றோ? இச்செயலை இராமபிரான் கண்டவனாதலின், முதலில் ஸுக்ரீவனும், வாலியும் போர்புரியுங்கால் வாலியை அடிக்க அவன் திருவுள்ளம் இசையாது இருந்தது.

பேரறிவாளனான இராமபிரான் ஸுக்ரீவனுக்கும் வாலிக்கும் உள்ள வேற்றுமையை உண்மையில் உணர



கந்தமாத பர்வதம்-இராமேஸ்வரம்: கமலா மாரியப்பன்-கோவை.



**கங்கை கொண்ட சோழபுரம்- திரு. வி. முத்துராமன்-கோவை.**

இயலாதோ? உணரவில்லையா? அல்ப அறிவுள்ளவன் கூட, 'அடிபடுபவன் ஸுக்ரீவன்; அடிப்பவன் வாலி' என்பதை எளிதில் அறியக்கூடியதை, 'என்னால் தெரிந்து கொள்ள முடிய வில்லை' என்று இராமபிரான் இயம்பு கின்றனனே, இது பொருந்துமோ? இதில் நம் ஆசார்யர்களின் திருவுள் ளக் கருத்தைக் கூறுவோம்.

இங்கு, முதலில் பின்கூறப்பெறும் உண்மை உணரத்தக்கதாம். பரம புருஷன், சேதனனை நோக்கி "நீ என்னிடத்தில் உனக்குள்ள அன்பை என் அன்பர்பால் செய்யாது இருப்பின், அவர் திறத்தில் அபராதத் தைச் செய்தவனாகுவாய்: அதனால் உனக்கு மாத்திரம் அழிவு உண்டாம் என்று எண்ணாதே, உன்னோடு தொடர்புள்ள இப்பிரபஞ்சமும் அழிந்து விடும்" என்று அருளிச்செய்து இருக்கின்றான்.

யா ப்ரீதிர் மயி ஸம்வ்ருத்தா
மத்பக்தேஷு ஸதாஸ்து தே |
அவமானக்ரியா தேஷாம் ஸம்ஹர
த்யகிலம் ஜகத் ||

என்னும் பரமபுருஷனின் திருவாக்கு இங்கு அனுபவிக்கத் தக்கது.

பின்பும் ஸுக்ரீவன் தன் செயலை உணர்ந்து இலக்குமணனிடம் எங் ஙனம் அன்பு காட்டுதல் வேண்டுமோ, அங்ஙனம் காட்டினதாய் காண பெற் றிலது. ஆனாலும், தன்னைப் பற் றினாரை அடியாருடைய அபிமானத் திற்குப் பாத்திரமாக்கிக் காரியம் செய்வது என்பது பரம புருஷனு டைய ஓர் உயரிய முறையாம். இம் முறையைத் திருவுள்ளம் பற்றி, ஸுக் ரீவனுடைய கழுத்தில் இலக்குமணன் தன் திருக்கைகளால் அடையாளமாய் கஜ புஷ்பமாலையைப் போடச் செய் யும் முகத்தால், அந்தபாகவதோத்த மனுடைய அன்புக்கு இலக்காக்கி, வாலியை இரண்டாம் போரில் கொன்று, ஸுக்ரீவனுக்கு அவன் கோரின பயனை அளித்திருக்கின் றான் இராமபிரான்.

இங்கு,

க்ருதா பிஜ்ஞாதசிஹ்நஸ்தம் அநயா
கஜஸாஹ்வயா |
லக்ஷ்மணேன ஸமுத்பாட்ய யைஷா
கண்டே க்ருதா தவ ||

என்னும் வார்த்தை அனுபவிக்க தக்கது.

இதுகாறும் கூறிய ஸுக்ரீவன் வர லாற்றில், ஆழ்ந்து, ஆராய்ந்து காணும்போது, "வெளிப்படையான பொருளில் உண்மை நோக்கு இன்று; உள்ளுறைப் பொருளிலேயே உத்தம னுடைய உக்திக்கு நோக்கு உண்டு" என்று நாம் அறிய வேண்டும்.

இதே மாதிரியாக 1989 தமிழ் அக்டோபர் 'ஸப்தகிரியில் 'ஸ்ரீ ராமாயணத்தில் பரத சரணாகதி ஒரு கண்ணோட்டம்' என்ற தலைப் பில் எழுதியுள்ளேன். நம் வாசகர் கள் படித்திருக்கலாம். அங்கேயும் புரு ஷோத்தமனுக்கு 'வெளிப் படையான பொருளில் நோக்கு இன்று; உள் ளுறைப் பொருளிலேயே நோக்கு' என்ற தத்வார்தத்தை எடுத்துரைத் திருக்கிறார் ஸ்வாமி.

அங்கு பரத சரணாகதியில், பர தன் இராமபிரானை முறையுடன் பற்றியிருந்தும் அப்பற்றுதல் அந்த இராமபிரான் திருவுள்ளத்திற்குப் பாங்காகயிராமையின் பயன்றற்றதாம் என்பதை ஸ்வாமி எழுதியுள்ளார். இப்பொருளை தேசிகன் திருவாக்கி லும் அனுபவத்திருக்கிறார். அந்த பரமரஸமான ஆழ்ந்த பொருளு டைய ஸ்லோகத்தை மறுபடியும் வாசகர்கள் படித்து இன்புறலாம்.

ராமே ராஜ்யம் பிதுரபிமதம
ஸம்மதம் ச ப்ரஜாநாம்
மாதா வவ்ரே ததிஹ பரதே
ஸத்ய வாதீ ததௌ ச |
சிந்தாதீத: ஸமஜநி ததா
பாதுகாக்ரயாபிஷேக:
துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ
தைவமத்ர ப்ரமாணம் ||"

(பாதுகாஸஹஸ்ரம்)

இத்திருவாக்கின் கருத்து: 'தசரத சக்கரவர்த்தி, இராமபிரானுக்கு முடி சூட்டி, இராச்சிய பாரத்தை அப் பரம புருஷனிடத்தில் வைக்க விரும் பினான். அச்சக்கரவர்த்தியின் கருத்தை மக்கள் அனைவரும் ஒருமுக மாக விரும்பினார்கள். அச்சக்கர வர்த்தி மஹிஷியான கைகேயி, பரத னுக்கு முடிசூட்டி இராச்சிய பாரத்தை அவனிடம் வைக்க வரம் கேட்டாள். ஸத்தியவாதியான சக்கர வர்த்தியும் அங்ஙனம் அளித்தான். ஆனால் சக்கரவர்த்தி கோரியவாறு இராமபிரானுக்கும், கைகேயி கோரிய வாறு பரதனுக்கும் திருஅபிஷேகம் நடைபெறாது, ஒருவரும் ஒருகாலும் எண்ணாதிருக்க, திருவடி நிலை களுக்குத் திருவபிஷேகம் நன்கு நடந் தது. இதற்குக் காரணம் எம்பெரு மானுடைய ஸங்கல்பமேயாம் என்ப தாம்." ★

# திருக்குறள் புதிர்

(திருக்குறள் புத்தகத்தினைப் பார்த்து விடை காணலாம்)

திரு. S. லோகநாயகி - கோயமுத்தூர்.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | 2 | | | | | |
| 3 | 4 | 5 | 6 | 7 | | 8 | | | | |
| | | | | | | 9 | | | | |
| | | | | | | 10 | | | | |
| | | | | | | 11 | | | | |
| 12 | | | | | | | | | | |
| 13 | | | | | | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | | | | | | | | | | |
| 20 | | | | | | | | | | |
| 21 | | | | | | | | | | |
| 22 | | | | | | | | | | |

**இடமிருந்து வலம் — குறிப்புகள் — எழுத்துக்கள்**

1. ———, ———, ——— கலங்காது ஞாலம் கருதுபவர். (11)
8. கள்வார்க்குத் தள்ளும் ———. (5)
9. "—— வள்ளியம" என்னும் செருக்கு. (5)
10. பீலிபெய் சாகாடும் ———. (5)
11. —— ஆக்கம் தரூஉம். (5)
12. ——, ——, ——, வாழ்க்கை உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும். (11)
13. —— துணிவு ஆற்றி இன்பம் பயக்கும் வினை. (3)
19. —— உணர்வானைத் தெய்வத்தொடு ஒப்பக் கொளல். (5)
20. ——— என்போர் அறவோர். (5)
21. திருக்குறளில் 65 வது அதிகாரம். (5)
22. —— —— வேண்டுபவர், பெயக்கண்டும் நஞ்சு உண்டு அமைவர். (11)

**மேலிருந்து கீழ் — குறிப்புகள் — எழுத்துக்கள்**

2. —— —— —— சொல்லை. (11)
3. —— மென்மை பகைவர் அகத்து. (4)
4. —— நொந்தது அளியர்க்கு. (4)
5. திருக்குறளில் 'க0ரு'வது அதிகாரம். (5)
6. —— —— தாள் சேர்ந்தார், பிறஆழி நீந்துவர். (9)
7. மந்தர்க்கு கற்றனைத்து —— ——. (6)
14. யாகாவார் —— —— காக்க. (5)
15. —— முற்றும் இடங்கண்ட பின்அல்லது. (5)
16. வளிவழங்கும் மல்லன்மா —— ——. (5)
17. —— அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்பு. (5)
18. குணம் நாடிக் —— நாடி......கொளல். (5)

(விடைகளுக்குக்கீழே பார்க்கவும்)

**விடைகள் :**

**இடமிருந்து வலம்**

1. காலம் கருதி இருப்பர்,
8. உயிர்நிலை,
9. உலகத்து,
10. அச்சிறும்,
12. துணைநலம்,
13. அளவு அறிந்து வாழாதான்,
13. செய்க,
19. அகத்தது,
20. அந்தணர்,
21. சொல்வன்மை,
22. நயத்தக்க நாகரிகம்.

**மேலிருந்து கீழ்**

2. திறன் அறிந்து சொல்லுக,
3. மேவற்க,
4. நோவற்க,
5. நல்குரவு,
6. அறஆழி அந்தணர்,
7. ஊறும் அறிவு.
14. ஆயினும் நா,
15. எள்ளற்க,
16. ஞாலம் கரி,
17. கொள்ளற்க,
18. குற்றமும்.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கப்படும். மேலும் தென்னகத்தைச் சார்ந்த புகழ் பெற்ற இசைக் கலைஞர்கள் பங்கேற்கும் வகையில் இசை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

ஃ ஃ ஃ

திருமலையில் நடைபெற்ற உடுப்பி மடத்தின் தலைவரான சுவாமி விஸ்வேஸ்வர தீர்த்தரின் 60-வது பிறந்த நாள் நிகழ்ச்சியில் பங்கேற்கும் வகையில், ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் அவர்கள் 9-3-91 அன்று திருமலைக்குத் தன் குடும்பத்தாருடன் வருகை புரிந்தார். இப்பிறந்த நாள் விழாவில் பங்கேற்றிடும் வகையில் உடுப்பியைச் சார்ந்த அஷ்ட மடாதிபதிகளும் ஒருங்கே திருமலையில் கூடியது சிறப்பானதொரு நிகழ்ச்சியாக அமைந்தது.

ஃ ஃ ஃ

அக்ஷர ஜோதி :

திருப்பதியிலுள்ள தி. தி. தே. ஸ்ரீ பாலாஜி உடல் ஊன முற்றோர் மறுவாழ்வு மருத்துவ மனை வளாகத்தில் அங்கு வரும் நோயாளிகளுக்கு 'எழுத்தறிவு' அளித்திடும் வகையில் 'அக்ஷர ஜோதி' எனும் திட்டம் ஒன்று 8-3-91 அன்று மேற்கொள்ளப்பட்டது. தி. தி. தேவஸ்தானம் மற்றும் திருப்பதி சத்ய சாயி ஸேவா சமிதி சார்பில் ஏற்பாடு செய்யப்பட்ட இத்திட்டத்தினை அறிமுகப் படுத்தும் முகமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவின்போது, தி. தி. தே. செயலாட்சித் தலைவரின் துணைவியார் அவர்கள் இத்திட்டத்தினைக் குத்து விளக்கேற்றித் துவக்கி வைத்தார். இம்மருத்துவமனையின் தலைமை மருத்துவரான டாக்டர். வியாக்யேஸ்வரன் அவர்கள் இவ்விழாவிற்குத் தலைமை வகித்தார்.

ஃ ஃ ஃ ஃ

அன்னமய்யா நினைவு நாள் விழா :

ஸ்ரீ அன்னமாசார்யாவின் 488-ஆவது நினைவு நாள் விழா திருப்பதியில் 13-3-91 முதல் 19-3-91 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 13-3-91 அன்று ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி மற்றும் ஸ்ரீ அன்னமாசார்யாவின் திருவுருவப் படங்கள் கொண்ட ஊர்வலம் ஒன்று நகரின் முக்கிய நகரங்களில் மேற்கொள்ளப்பட்டது. இதுபோது பகல் நேரங்களில் அன்னமய்யா இலக்கிய நிகழ்ச்சிகளும், மாலை நேரங்களில் புகழ் பெற்ற இசைக் கலைஞர்கள் பங்கேற்ற இன்னிசைக் கச்சேரிகளும் நடைபெற்றன.

ஃ ஃ ஃ ஃ

திருமலையில் கோயிலின் வருடாந்திர வசந்தோத்ஸவம் 28-3-91 முதல் இரண்டு நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. 29-3-91 அன்று ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமியின் உத்ஸவ திருமேனியை வெள்ளித்தேரில் எழுந்தருளச் செய்து, திருமலையில் வீதி வலம் மேற்கொள்ளப்பட்டது.

ஃ ஃ ஃ ஃ

திருப்பதி நகர மையத்தில் இருக்கும் 'மகாவீர்' திரையரங்கு வளாகத்தினை உயர்நீதி மன்றம் அண்மையில் அளித்த தீர்ப்பின்படி, தி. தி. தேவஸ்தானம் 5-3-91 அன்று தன் வசம் கையகப்படுத்திக் கொண்டது. சுமார் 2.76 ஏக்கர் நிலப்பரப்பு, கொண்ட இம்மனையின் தற்போதைய மதிப்பு ரூ. 4 கோடியாகும்.

ஃ ஃ ஃ

இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். எஸ். சங்கர் தயாள் சர்மா அவர்கள் தன் குடும்பத்தாருடன் 20-3-91 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். தக்க கோயில் மரியாதைகள் ஏற்றுக் கொண்டபின், தி. தி. தே. உயர் அலுவலர்கள் எதிர்கொள்ள, பின்னர் இறைவனைத் தரிசித்தார். ★

தி. தி. தேவஸ்தானத்தின் முன்னாள் சுகாதர அலுவலரும், 'ஸப்த கிரி' பத்திரிகையில் பல ஆண்டுகள் அவ்வப்போது சமயக் கட்டுரைகளை எழுதிய வரும், ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி சம்பந்தப்பட்ட பல சமய நூல்களின் ஆசிரியருமான டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு அவர்கள் தமது 91-ஆம் வயதில் கோயம்புத்தூரில் தமது இல்லத்தில் 25-3-91 அன்று காலமானார் என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஃ ஃ ஃ

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

திருமலைக் கோயில்களில் ஆகம விதிகளுக்குட்பட்ட ஸம்ப்ரதாய முறைகளை நெறிபடுத்தியதும், திராவிட வேதமான திவ்யப் பிரபந்தப் பாக்களை சமயச் சடங்குகளின்போது ஓதப்படுத்தியதும் மூலமாக அவரது நிர்வாகத் திறமையினையும் தமிழ்ப் பற்றினையும் நாம் எண்ணி எண்ணி இன்புறத் தக்கச் செய்திகளாம் ஒரு ஆசார்யன்-ஒரு சிஷ்யன் எனும் மரபுவழி தகர்த்து, வைணவ நெறி செழித்தோங்கிட பலரை இன பேதம் பார்க்காது தனது சிஷ்யர்களாக ஏற்றுக்கொண்டது அவர்தம் பரந்தமனப்பான்மைக்குச் சிறந்த சான்றாக அமைந்தது.

இவ்வகையில் சிறந்த வைணவப் பெருந்தகையாளராக, சமயப் பேரறிஞராக, தத்துவப் பெட்டகமாக, தேர்ந்த ஆசார்யனாக, ஈடு இணையற்ற சமுதாய சீர்திருத்த வாதியாக, எல்லாவற்றிற்கும் மேலாக 'மனித இலக்கணம்' வகுத்த 'தயா சிந்து'வாக விளங்கிய அவ்'எம்பெருமானாரை' நாம் நம் வாழ்க்கையில் ஒரு சில கணங்களாவது சிந்தித்தால் அதுவே, நம் பிறவிக்குப் பெருமை சேர்க்கும்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

